# அம்புலிமாமா

மதிமுகம் : 104 ஏப்ரல் : 2001 புன்னகை : 4



## பொருளடக்கம்



Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai-600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekattuthangal. Chennai-600 097, Editor : Viswam

### சிறப்புப் படைப்பாக



உண்மையான பக்தன் (வேதாளம் சொல்லும் கதை)



மாயாஜால மலை

ஏற்ற மருமகள்





இந்தியப் பண்பாடு - வரலாறு

நீங்கள்

அயல்நாடுகளிலுள்ள உங்கள்
உறவினர்களுக்கும்,
நண்பர்களுக்கும்



# அம்புலிமாமா

இதழை அவர்கள் விரும்பும்
மொழியில் கொடுங்கள்

அஸ்ஸாமி, வங்காளம், ஆங்கிலம்,
ஹிந்தி, குஜராத்தி, கன்னடம்,
மலையாளம், மராட்டி, சமஸ்கிருதம்,
ஒரியா, தமிழ் மற்றும் தெலுங்கு

அயல் நாட்டிலும் அவர்கள் தம் தாய்நாட்டில்
உள்ளது போன்ற மகிழ்ச்சியை அனுபவிக்கட்டும்

## சந்தா விவரங்கள் :

விமானத் தபாலில் எல்லா நாடுகளுக்கும்
பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.900/–

இந்தியாவில் தரைவழித் தபாலில்
பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.120/–

நீங்கள் செலுத்தும் பணத்தை டி.டி.யில் அல்லது
மணியார்டரில் 'சந்தமாமா இந்தியா லிமிடெட்'
என்ற பெயர் எழுதி அனுப்பும் முகவரி :

**SUBSCRIPTION DIVISION**
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097.
E-mail : subscription@chandamama.org


ஆசிரியர்
விஸ்வம்

எல்லாக் கடிதப்
போக்குவரத்துகளும் :

சந்தமாமா
பத்திரிக்கைப் பிரிவு,
எண் : 82, டிஃபென்ஸ்
ஆபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல்,
சென்னை – 600 097.

தொலைபேசி : 2347384
2347399


**For USA**
**Single copy $2**
**Annual subscription $20**
***Intending subscribers in the USA and Canada can mail their remittances to :***
**INDIA ABROAD**
**43 West 24th Street**
**New York, NY 10010**
**Tel: (212) 929-1727**
**Fax (212) 627-9503**
**E-Mail : mail@indiaabroad.com**



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்கரபாணி

# வசந்தம் தொலைவில் இராதே!

எல்சால்வடார் நாட்டில் ஒரு மலையடிவாரத்திலுள்ள சாண்டா டெக்லா என்ற சிறு ஊர் அமைதியான சில குடியிருப்புகளைக் கொண்டது. திடீரென இந்த ஆண்டு ஜனவரி 13ல் இந்த ஊரின் பெயர் எல்லாச் செய்திப் பத்திரிகைகளிலும் அடிபட்டது. அதற்குக் காரணம் இவ்வூரில் கட்டப்பட்டிருந்த வீடுகள் நூற்றுக்கணக்கில் சரிந்து, இடிந்து விழுந்து ஆயிரம் பேர்களுடைய உயிரை பலி வாங்கிவிட்டன. இதற்குக் காரணம் பெரும் பணக்காரர்கள் மலைச் சரிவிலிருந்த மரங்களை வெட்டிவிட்டுத் தம் ஆடம்பர வீடுகளைக் கட்டிக் கொண்டது தான்.

இவ்வாறு மரங்களை வெட்டியதால் நிலத்தின் அடிப்பகுதியிலுள்ள மண்ணும், பாறைகளும் தளர்ந்து போயின. இந்நிலையில் அங்கு கட்டப்பட்ட கட்டடங்கள் நிலைத்து இருக்க முடியாமல் சரிந்து விழுந்தன. இந்த வீட்டு மனைகளை வாங்க அதன் சொந்தக்காரர்கள் பெருந் தொகைகளை விலையாகக் கொடுத்தனர். ஆனால் அந்நகர மேயர் ''எங்களுக்குப் பணம் கிடைத்து என்ன பயன்? விலை மதிப்பற்ற பல உயிர்களை இழந்துவிட்டோமே'' என்று கூறிக் கண்ணீர் வடித்தார்.

குளிர்காலத்திற்குப் பின் வசந்த காலம் தொலைவில் இல்லை தான். ஆனால் மனிதன் இயற்கையைப் பாழ் படுத்தினால் பருவ காலங்கள் வருவது கூட மாறிவிடுமே ! எனவே, மனிதன் இயற்கை வளத்தை மதித்து நடந்தாலே சுகப்பட முடியும். அதனை அவன் அழித்தால் அவனும் அழிவான் என்பதைப் புரிந்து கொண்டு செயல்பட வேண்டும்.

# பெருமைப்படும் நேரம்

இவ்வாண்டு ஜனாதிபதி விருதுகளை அறிவித்த போது அவற்றில் 'பத்ம ஸ்ரீ' விருதுகளைப் பெற்ற இருவர் சந்தமாமாவின் ஆசிரிய ஆலோசகர்களான மனோஜ் தாஸ், ரஸ்கின் பாண்ட் என்று கண்டு நாம் பெரும் மகிழ்ச்சியும், பெருமிதமும் கொண்டோம். நம் வாசகர்களும் இவ்வாறே மகிழ்ந்திருப்பார்களெனவே எண்ணுகிறோம்.



மனோஜ் தாஸ் எம் பதிப்பகத்துடன் கடந்த முப்பது ஆண்டுகளாகத் தொடர்பு கொண்டுள்ளவர். அவர் தம் பெயரிலும், புனைப் பெயரிலும் பல கதைகளையும், கட்டுரைகளையும், சிறப்புப் பகுதிகளையும் எழுதி இருக்கிறார். சந்தமாமா வெளியீடான 'ஹெரிடேஜ்' என்ற பத்திரிகையை நிறுவிய ஆசிரியரும் இவரே.

ஒரிஸ்ஸா மாநிலத்தில் உயரிய குடும்பத்தில் 1934ல் பிறந்த இவர் இளம் பிராயத்தில் பல இன்னல்களுக்காளானார். அதனால் வேதாந்த விசாரத்தில் மூழ்கி அரவிந்தர், அன்னை, புதுச்சேரி ஆசிரமம் என்பன இவரைக் கவர்ந்தன. அதனால் 1963ல் இவர் புதுச்சேரி ஆசிரமத்திற்கு வந்துவிட்டார். உலக அரவிந்தர் மையத்தில் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

ஒரியாவிலும், ஆங்கிலத்திலும் இவர் 1949 முதல் எழுதி வருகிறார். சாகித்ய அகாடமி (1972), சரளா விருது (1980), சாகித்ய பாரதி விருது (1994), சரஸ்வதி சம்மான் என இவர் பல விருதுகளைப் பெற்றவர். சிங்கப்பூர் அரசாங்கத்தின் கல்வி ஆலோசகராகவும் சில ஆண்டுகள் இருந்திருக்கிறார். சந்தமாமா 1997ல் தன் பொன் விழாவின் போது ஏழு புத்தகங்களை வெளியிட்டது. அவற்றில் ஆறு இவருடையவை.



மற்ற ஒன்று ரஸ்கின் பாண்டுடையது. இவரும் சந்தமாமா ஆசிரிய ஆலோசகரே. இவருக்கும் 1999ல் 'பத்ம ஸ்ரீ' விருது வழங்கப்பட்டது. ஆங்கிலத்தில் மிக நன்றாக எழுதும் இவர் சிறு வயது முதலே தாம் பிறந்த இங்கிலாந்தில் எழுதத் தொடங்கிவிட்டார். இவருக்கு சாகித்ய அகாடமி விருதும், ஹன்ஸ் கிரிஸ்டியன் ஆண்டர்சன் விருதும் (1998) கிட்டியுள்ளன. இவை குழந்தை இலக்கியப் படைப்புகளுக்காக அளிக்கப்பட்டவை. இந்திய வாழ்க்கை, இயற்கை சூழ்நிலை ஆகியவற்றை இவரது கதைகள் அடிப்படையாகக் கொண்டிருக்கும். சந்தமாமா இவரது கதைகளைக் கடந்த ஓராண்டு காலமாக வெளியிட்டு வருகிறது.

'பத்ம ஸ்ரீ' விருதுகளைப் பெற்ற மனோஜ் தாஸிற்கும், ரஸ்கின் பாண்டிற்கும் எம் சார்பிலும், எம் வாசகர் சார்பிலும் எம் வாழ்த்துக்களைத் தெரிவிப்பதோடு, அவர்கள் மேன்மேலும் எழுதி நற்பணியாற்றி வரவும் வேண்டுகிறோம். –வெளியிடுபவர்.

உங்கள் விடுமுறையை ஒரு பரிசைப் பெறப் பயன்படுத்துவீர்களா!



சிறுவர்கள் கலந்து கொள்ள விடும் அழைப்பு

# சிறுவர் சிறப்பிதழ்

(நவம்பர் 2001 இதழ்)

**இளம் எழுத்தாளர்களுக்கு** :– நீங்களே சிந்தித்து எழுதிய கதைகளை 300லிருந்து 500 சொற்களுள் இருப்பதாக அனுப்பலாம். நல்ல தலைப்புடன், புதிர்கள், விடுகதைகள் அல்லது நகைச்சுவை துணுக்குகள் ஆகியவற்றையும் மூன்றுக்கு மேற்படாமல் ஒருவரே அனுப்பலாம். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், குஜராத்தி, மராத்தி, ஒரியா, வங்காளி, ஹிந்தி, ஆங்கிலம் ஆகியவற்றில் எந்த மொழியிலும் எழுதி அனுப்பலாம். உங்கள் கதைகளுக்குச் சித்திரம் வரைந்து கொடுக்க யாராவது உங்கள் நண்பர் இருந்தாலும், அவற்றையும் கதைகளோடு சேர்த்து அனுப்பலாம். அவை நன்றாக இருந்தால் நாம் உம் நண்பரை சென்னைக்கு எம் செலவில் வரவழைத்து போட்டி முடியும் வரை வசதிகள் அளிப்போம்.

**இளம் ஓவியர்களுக்கு** :– இந்தியப் புராணங்களிலிருந்தோ, வரலாற்றிலிருந்தோ சித்திரங்கள் வரைந்து அவற்றை விளக்கும் சிறு குறிப்புகளை அனுப்பலாம். ஒருவர் மூன்று சித்திரங்களுக்கு மேல் அனுப்பக் கூடாது. அவற்றை நன்றாக வரைந்திருக்கிறார்கள் என நாம் கருதுபவர்களை சென்னைக்கு வரச் சொல்லி, எம் சிறப்பு மலரில் வெளியிடப்போகும் கதைகளுக்கோ, சிறப்புப் பகுதிகளுக்கோ ஓவியம் தீட்டுமாறு கூறுவோம்.

**முடிவு தேதி : ஜுன் 7, 2001**

**பரிசுகள்** :– திறமையான படைப்புகளுக்குக் கவர்ச்சிகரமான பரிசுகள் உண்டு.
**போட்டோ** :– நீங்கள் அனுப்பும் படைப்புடன் பாஸ்போர்ட் அளவு போட்டோ ஒன்றையும் இணைத்து அனுப்பவும்.

**பெயர்** :........................................................வயது / பிறந்த தேதி :...........................

**வகுப்பு** :............ **பள்ளி** : ...................................................................................

**வீட்டு முகவரி** : ...........................................................................................

..........................................................................................................

.................................................................... **பின்கோடு** :...................................

**படைப்பு பற்றிய விவரங்கள்** :–

1. ..................................................................
2. ..................................................................
3. ..................................................................

மேற்குறிப்பிடப்பட்ட படைப்புகள் என் மகனால்/மகளால் யாருடைய உதவியுமின்றி சுயமாகச் சிந்தித்துப் படைக்கப்பட்டவை. தேர்ந்தெடுக்க இதன் எல்லா உரிமைகளும் சந்தமாமா நிறுவனத்திற்கே சொந்தம் என்றும் இதை அச்சிலோ, மின் சாதனங்களிலோ, எம் மொழியிலும் அவர்கள் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதற்கும் ஒப்புதல் அளிக்கிறேன்.

..................................... .....................................
பங்கேற்பவரின் கையொப்பம் பெற்றோரின் கையொப்பம்

( அடுத்த பக்கத்திலுள்ள படிவத்தை நிரப்பி எமக்கு அனுப்புங்கள் )

1. நீங்கள் அம்புலிமாமா அல்லது அதன் இதர பதிப்பின் சந்தாதாரரா? எம் மொழியில்?

..........................................................

2. நீங்கள் சந்தா செலுத்தியவரல்ல என்றால் எவ்விதத்தில் அதனைப் பெற்றுப் படிக்கிறீர்கள்? (✓ குறியிடவும்)

பத்திரிகை விற்பனையாளர் : ..........................

நூலகம் : ..........................................

நண்பர் : ..........................................

3. உங்கள் பிரதியை எவ்வளவு பேர்கள் படிக்கிறார்கள்?

..........................................................

4. எந்தப் பகுதிகளை நீங்கள் மிகவும் விரும்புகிறீர்கள்? (வரிசைப்படுத்தவும்).

1. ..........................................................

2. ..........................................................

3. ..........................................................

4. ..........................................................

5. ..........................................................

6. ..........................................................

5. எப்பகுதிகள் இப்பத்திரிகையில் இல்லை என்றும், எவை சேர்க்கப்பட வேண்டுமென்றும் எழுதுங்கள்.

1. ..........................................................

2. ..........................................................

3. ..........................................................

4. ..........................................................

6. எந்த மாதிரியான ஓவியங்கள் உங்களைக் கவர்ந்தன? (எந்த இதழ், மாதம், கதை/அம்சம், பகுதியின் பெயர்)

..........................................................

..........................................................

..........................................................

..........................................................

..........................................................

7. கடந்த ஆறு இதழ்களில் எந்த இதழின் அட்டைப் படம் தங்களைக் கவர்ந்தது? (எந்த மொழி இதழ், மாதம்)

..........................................................

8. அ). தொழில் : ..........................................

தந்தை : ..........................................

தாய் : ..........................................

ஆ). குடும்ப மாத வருமானம் (✓ குறியிடவும்)

ரூ.5,000/- ..........................................

ரூ.5,001 —10,000/- ..........................

ரூ.10,000க்கு மேல் ..........................

9. நீங்கள் தொலைக்காட்சி பார்ப்பதுண்டா?

தூர்தர்ஷன் ..........................................

செயற்கைக் கோள் சேனல் ..........................

10. உங்கள் தொலைக்காட்சிப் பெட்டியின் வகை வண்ணமா? .......................... அல்லது கருப்பு/வெளுப்பா? ..........................

11. நீங்கள் பள்ளிக்கு எப்படிச் செல்கிறீர்கள்?

ஸ்கூல் பஸ் ..........................................

நகர பஸ் ..........................................

சொந்த வாகனம் :

இரு சக்கரம் ..........................

நான்கு சக்கரம் ..........................

யார் உங்களைப் பள்ளியில் கொண்டு விடுகிறார்கள்?

பெற்றோர் ..........................

டிரைவர் ..........................

12. நீங்கள் வேறு ஏதாவது குழந்தைப் பத்திரிகையின் சந்தாதாரரா?

பெயர் : ..........................................

13. நீங்கள் எந்த தினசரிப் பத்திரிகையைப் படிக்கிறீர்கள்?

பெயர் : ..........................................

வேதாளம்
சொல்லும்
கதை

# உண்மையான பக்தன்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி, அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே ! இந்த பயங்கர இரவில் நீ ஏன் தானோ இப்படியெல்லாம் முயற்சி செய்கிறாய்? முயற்சி செய்து விட்டால் மட்டும் ஒருவன் விரும்பும் பலனை அடைந்து விட முடியாது. சில சமயங்களில் அத்தகைய முயற்சி வீணாகிப் போய் விடுவதும் உண்டு. இதை விளக்க உனக்கு



ரங்கபட்டர் என்ற அர்ச்சகரின் கதை யைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையைச் சொல்ல லாயிற்று.

இந்திரபுர மன்னன் இந்துசேனன் நோயுற்றுப் பல மாதங்கள் படுத்த படுக்கையாய்க் கிடந்தான். பல பிர பல வைத்தியர்கள் வந்து அவனுக்கு மருந்துகள் கொடுத்தும், அவனது நோய் போகவில்லை.

ஒரு நாள் கனவில் அவன் முன் ஒரு மகான் தோன்றி, ''மன்னா! உன் ஆட்சியில் நாட்டில் பாவங்கள் நிறைந்துவிட்டன. அதனால் தான் உன்னை இப்படி ஒரு கடும் நோய் பற்றிவிட்டது. இந்நோய் போக வேண்டுமானால் எப்போதும் கடவு ளைக் கண்டு கொண்டிருக்கும் ஒரு பக்தன் உனக்கு மூன்று துளசி இலை களைக் கொடுக்க, அவற்றை நீ அவனிடமிருந்து வாங்கி, வாயில் போட்டு மென்றால் மறுவிநாடியே உன் நோய் மறைந்துவிடும். ஒரு விஷயம் நினைவில் இருக்கட்டும். அந்த பக்தன் தொடர்ந்து பதிமூன்று ஆண்டுகளாவது கடவுளைக் கண்டு கொண்டே இருந்தவனாக இருக்க வேண்டும்'', எனக் கூறி மறைந்தார்.

மறுநாள் காலையில் மன்னன் தன் மந்திரிகளை அழைத்துத் தான் கண்ட கனவைக் கூறி அத்தகைய பக்தனைத் தேடிக் கண்டுபிடிக்குமாறு கட்டளை இட்டான். மந்திரிகளும், எப்படியா வது மன்னனின் நோய் குணமடைந் தால் போதும் என எண்ணி அத்தகைய பக்தன் எங்கே இருக்கிறான் என்று தேடலானார்கள்.

ரங்கபுரம் என்ற ஊரில் புகழ் பெற்ற ராமர் கோயில் இருந்தது. அதன் அர்ச்சகர் ரங்கபட்டர். அவர் நன்கு படித்தவர். ஆசாரசீலர். ஒரு முறை அவர் யாரோ ஒரு பண்டிதருடன் வாத-விவாதம் செய்தார். அப்பண்டி தர் கூறியதை எல்லாம் மறுத்துப் பேசிய ரங்கபட்டர், ''நீர் யாரென்று கூட விசாரியாமல் உம்முடன் நான் வாதம் புரிந்ததே தவறு. உம்மை என்னருகே வரக் கூட விட்டிருக்கக் கூடாது. நீர் என்ன குலமோ? உம் கோத்திரம் என்னவோ? இதை எல் லாம் அறிந்து கொள்ளாமல் உம் மோடு பேசியதே தப்பு'', என்று பொறுமை இழந்து கத்தினார்.

ஆனால் அப்பண்டிதரோ, ''எல்லா வற்றையும் நன்கு கற்ற பண்டிதருக்

குக் குலமோ, கோத்திரமோ எதுவும் கிடையாது'' எனக் கூறி ரங்கபட்டரின் முதுகில் தட்டி ''நானும் வேதங்களையும், சாஸ்திரங்களையும் நன்கு கற்றவனே. ஆனால் தாழ் குலத்தில் பிறந்தவன். என் தந்தை செருப்புத் தைப்பவர்'' என்றார். அதைக் கேட்ட ரங்கபட்டர் தம் இரு காதுகளையும் பொத்திக் கொண்டு, ''ராமா! ராமா!! அபசாரம். நீ என்னைத் தொட்டதால் தீட்டு பட்டுவிட்டது. இதற்குப் பரிகாரம் செய்து கொள்ள வேண்டும்'' எனக் கூறி உடனே போய் குளித்து விட்டு வந்தார். அதன்பின் அவர், ''என் பாவம் போக நான் ராமர் விக்கிரத்தின் முன் அமர்ந்து அவரை தியானம் செய்து கொண்டே இருப்பேன். இனி நான் என் வீட்டிற்கே போக மாட்டேன்'' எனக் கூறி அந்த ஆலயத்தின் ராமர் விக்கிரகத்தின் முன் அமர்ந்து விட்டார். அவரது மனைவி மக்கள் அவரை வீட்டிற்கு வருமாறு அழைத்தும் அவர் எழுந்து செல்லாமல் ராமர் விக்கிரகத்தின் முன்னாலேயே உட்கார்ந்திருந்தார். இப்படியே பன்னிரெண்டு வருடங்கள் கழிந்து விட்டன.

ரங்கப்பட்டரின் இச்செய்கை பல ஊர்களில் பரவியது. மக்கள் அவரைப் பரம பக்தர் எனக் கருதி அவரை தரிசிக்க அந்த ஆலயத்திற்கு வரலாயினர். அவரும் எப்போதும் ஆலயத்தில் ராமர் விக்கிரகத்தின் முன் அமர்ந்து, ஆசீர்வதித்து அனுப்பி வந்தார். இதனால் அவரை யாவரும் பக்த சிரோமணி என்று புகழ்ந்தனர்.



ரங்கபட்டரைப் பற்றிக் கேள்விப் பட்ட ஒரு மந்திரி ரங்கபுரத்திற்கு வந்து கோவிலில் ரங்கபட்டரைக் கண்டார். அவரிடம், ''ஸ்வாமி! எம் மன்னர் கடும் நோயால் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருக்கிறார். அவரது நோயை எப்போதும் கடவுள் முன் உட்கார்ந்திருக்கும் ஒரு பக்தரால் தான் தீர்க்க முடியும் என்று ஒரு மகான் அவரது கனவில் தோன்றிக் கூறினார். தாங்களோ பரம பக்தர்'', என்று கூறி அவர் அரண்மனைக்கு வந்து மன்னருக்கு மூன்று துளசி இலைகளைக் கொடுக்க வேண்டும் என்று வேண்டினார்.

ரங்கபட்டரோ ''நான் இந்த விக்கிரகத்தின் முன்னாலிருந்து நகர மாட்டேன். கடந்த பதினான்கு வருடங்களாக இந்த ராமர் முன் இருந்து




நகராமல் அவரை வழிபட்டு வருகி றேன். என்னைப் பிடித்த பாவமும், தீட்டும் போன பிறகே இங்கிருந்து நகர்வேன். மன்னரை இங்கே அழைத்து வாருங்கள். நான் அவ ருக்குத் துளசி இலைகளைத் தருகி றேன். அவர் அவற்றை வாயில் போட்டு, மென்றதும் அவரது நோய் மறைந்து போய்விடும். அதனால் என்னைப் பற்றிக் கொண்ட தீட்டும், பாவமும் போனதாகவே கருதுவேன்'' என்றார். மந்திரியும் மன்னரின் நோய் எப்படியாவது போனால் போதும் என்று எண்ணி மன்னரை அழைத்துக் கொண்டு வருவதாக ரங்கபட்டரிடம் கூறிவிட்டுச் சென்றார்.

இந்திரபுரத்திற்கு மந்திரி சென்று மன்னனிடம் ரங்கபட்டரைப் பற்றிக் கூறி ''அவர் பரம பக்தர். கடவுளுக்கு முன்னால் பதினான்கு வருடங் களுக்கு மேலாக தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிறார். அவரை நீங்கள் தரிசித்து அவர் கையிலிருந்து மூன்று துளசி இலைகளை வாங்கி, வாயில் போட்டு மென்றால் உங்கள் நோய் போய் விடும்'' என்றார். மன்னனும் உடனே பல்லக்கை எடுத்து வரச் சொன்னான். பல்லக்கு வந்ததும், மன்னனின் பரிவாரம் அதில் அவ னைப் படுக்க வைத்தது. பல்லக்கு ரங்கபுரத்திற்குச் சென்றது.

ரங்கபுரத்து எல்லையில் பல்லக்கு தூக்கிகள் பல்லக்கை இறக்கிக் கீழே வைத்தார்கள். அப்போது ஒரு மகான் அங்கே வந்து மன்னனைக் கண்டார். அவரது நோய் பற்றியும் ரங்கபட்ட ரைக் காண அவன் சென்று கொண்டி ருப்பதையும் அவர் விசாரித்துத் தெரிந்து கொண்டார். அப்போது அவர் மன்னனிடம், ''நீ வீணாகப் பெருமாள் கோயில் வரை போக வேண்டாம். இங்கேயே நான் மூன்று துளசி இலைகளைக் கொடுக்கிறேன். அவற்றை வாயில் போட்டு, மென்று தின்றால், உன் நோய் போய் விடும்'' என்று கூறினார். அதற்கு மன்னன் ''நீங்கள் கடவுள் முன் எவ்வளவு காலம் இருந்து வழிபட்டு பக்தர் ஆனீர்கள்?'' என்று கேட்டான்.

மகானும் சிரித்தவாறே, ''நான் ஊர் ஊராகச் சுற்றி மக்களுக்குப் பணி புரிகிறேன். எந்தக் கோவிலிலும் விக்கிரகத்தின் முன் வருடக் கணக்கில் உட்கார்ந்து கடவுளை வழிபட வில்லை. ஆனால், மனிதர்களை எல்

லாம் கடவுளாகவே காண்கிறேன்'' என்றார். ஆனால் மன்னனோ ''இப்படிச் செய்தால் ரங்கபட்டரைப் போல நீங்கள் பக்தராகிவிட முடியாது. அவர் பதினான்கு ஆண்டுகளுக்கு மேலாக ஆலயத்தில் விக்கிரகத்தின் முன் தொடர்ந்து அமர்ந்து, பக்தர் என்று புகழ் பெற்றிருக்கிறார். எனவே அவர் கொடுக்கும் துளசி தான் என் நோயைப் போக்கும்'' என்றான்.

மகானும், ''சரி. நீ ரங்கபட்டரைக் கண்டு அவர் கொடுத்த துளசியைச் சாப்பிட்டும் உன் நோய் போகாவிட்டால் நீ மறுபடியும் இங்கே வா. நான் துளசி இலைகளைக் கொடுக்கிறேன். அதை மென்று தின்று உன் நோயைக் குணப்படுத்திக் கொள். நீ ரங்கபுரத்திலிருந்து வரும் வரை நான் இங்கேயே இருக்கிறேன்'' என்றார்.

மன்னன் பல்லக்கில் ரங்கபுர ஆலயத்திற்குப் போய் சிரமப்பட்டு எழுந்து ரங்கபட்டரை வணங்கினான். அவரும், ''கவலைப்படாதீர்கள். நான் துளசியைக் கொடுக்கிறேன். அதை நீங்கள் மென்று தின்றதும் உங்கள் நோய் போய்விடும். உங்கள் நோய் போய்விட்டால், என் பாவமும், தீட்டும் போய், நான் உண்மையான பக்தனே என்பதும் உலகிற்குத் தெரிந்துவிடும்'' என்றார். அவர் மூன்று துளசி இலைகளை மன்னனுக்குக் கொடுக்க, அவனும் அதனை வாயில் போட்டு மென்றான். ஆனால் அவனது நோய் மறையவில்லை.



அதுகண்டு மன்னனும் ரங்கபட்டரும் திகைத்தார்கள். மன்னனும் பட்டரிடம் தான் அந்த ஊர் எல்லையில் ஒரு மகானைக் கண்டதையும், அவர் தாம் மூன்று துளசி இலைகளைத் தான் கொடுத்தால் அவற்றை வாயில் போட்டு மென்றதும் நோய் மறைந்துவிடும் என்று கூறியதைச் சொன்னான்.

பின் இருவரும் ஊர் எல்லையில் காத்திருந்த மகானைக் கண்டார்கள். அவர் மன்னனிடம் மூன்று துளசி இலைகளைக் கொடுத்ததும், அவன் அவற்றை மென்று தின்றான். மறுவிநாடியே அவனது நோய் மறைந்தது. அவனும் எழுந்து உட்கார்ந்தான். மன்னன் தலைநகருக்குச் சென்றான். ரங்கபட்டர் தலை குனிந்தவாறே தன் வீட்டிற்குச் சென்றார்.

வேதாளம் இக்கதையைக் கூறி, ''மன்னனே! பல வருடங்கள் முனைப்புடன் அமர்ந்து, பரம பக்தர் எனப் பெயர் பெற்ற ரங்கபட்டர் கொடுத்த துளசியால் மன்னன் ஏன் குணமடையவில்லை? அவர் தான் பதினான்கு ஆண்டுகள் கடவுள் விக்கிரகத்தின் முன் அமர்ந்து, அவரை வழிபட்டுப் பரம பக்தர் என்று பெயரையும் அடைந்து புகழ் பெற்றவராயிற்றே? அப்படி இருந்தும், அவர் கொடுத்த துளசியை மன்னன் மென்றும் குணமடையாதது ஆச்சரியமாக இல்லை?

ஊர் ஊராகத் திரிந்து மக் களுக்குப் பணிபுரிந்த மகான் கொடுத்த துளசியால் மன்னன் ஏன் குணமானான்? இந்தக் கேள்விகளுக்குச் சரியான விடைகளைத் தெரிந்ததும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்து, சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''ஒருவர் கடவுள் விக்கிரகத்தின் முன் உட்கார்ந்து விட்டால் மட்டும் பரம பக்தராகிவிட மாட்டார். ரங்கபட்டர் கடவுள் எங்கும் இருப்பவர் என நினைக்கவில்லை. கடவுள் என்றால் கோவிலுள் இருக்கும் விக்கிரகமே என எண்ணிவிட்டார். ஆனால் மன்னனைச் சந்தித்த மகானோ ஊர் ஊராகச் சென்று, மனிதர்களுக்குப் பணி புரிந்து, அவர்களைக் கடவுளாகக் கருதியதால், அவர் எப்போதும் கடவுள் முன் இருந்தார். அவரால் மக்கள் பயன் பெற்றனர்.

மானிடனுக்குச் செய்யும் பணி கடவுளாகிய மாதவனுக்குச் செய்யும் பணி. இதனால் உண்மை யான பக்தர் மன்னனைக் கண்ட மகான், ரங்க பட்டர் அல்ல. அதனால் தான் மகானின் துளசி மன்னனின் நோயைப் போக்கியது. ரங்கபட்டர் கொடுத்த துளசி நோயைப் போக்க வில்லை. இதனைப் புரிந்து கொண்ட மன்னனும், பட்டரும் தம் இருப்பிடங்களுக்குச் சென்றனர்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.





# மாயாஜால மலை

## 3

(ஜீவதத்தனும், கஜவர்மனும் கொள்ளைக்காரர்கள் நதிக்கரையோரம் இருப்பதைப் பார்த்தார்கள். இருட்டிவிட்டதும் அவர்கள் கொள்ளைக்காரர்களைத் தாக்க நினைத்த போது ஒரு மலைக் குகையிலிருந்து ஒரு மந்திரவாதி ஒரு ஜடாமுனியை அனுப்ப, அவன் பயங்கரமாகக் கத்திக் கொண்டு கொள்ளைக்காரர்கள் தங்கி இருக்கும் இடத்தை நோக்கி வேகமாக ஓடினான். அப்போது)

கொள்ளைக்காரர்கள் நெருப்பு மூட்டி அதைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களது தலைவன் பயங்கர உருவமான ஜடாமுனி வேகமாக வந்து கொண்டிருப்பதைப் பார்த்து விட்டான். அந்த உருவம் கையில் தீவட்டியுடன் வருவதையும் கண்டான். இதற்கு முன் அந்த உருவத்தைப் பார்த்து விட்ட மற்ற கொள்ளைக்காரர்கள், ''ஐயோ! ராட்சஸன் வருகிறானே!'' என்று அலறினார்கள்.

அவர்களது தலைவனோ, ''ஏன் இப்படி பயந்து சாகிறீர்கள்? கையில் ஈட்டி இருக்கிறது. இதனால் ஒரு குத்து குத்தினால், அது துடிதுடித்து விழுந்து விடும்'' என்றான். ஆனால் கொள்ளைக்காரர்களோ, நடுங்கி ஓடலானார்கள். இதற்குள் ஜடாமுனி அக் கொள்ளைக்காரர்களிடையே புகுந்து சிலரை மிதித்து உதைத்தது. தான் எடுத்து வந்த தீவட்டியால் சில கொள்ளைக்காரர்களின் ஆடைகளில் தீ வைத்தது.

உயரமான இடத்திலிருந்து இச் சம்பவங்களைப் பார்த்துக் கொண்டிருந்த ஜீவதத்தனும், கஜவர்மனும் திகைத்து நின்றனர். சில விநாடிகளுக்குப் பின் ஜீவதத்தன், ''கஜா! இந்த ஜடாமுனி ராட்சஸப் பிறவி



குகையில் 'குப்'பென நெருப்பு எரிந்தது. மந்திரவாதி ''பைரவி! பத்ர காளி!'', என உரக்கக் கூவியவாறே தீவட்டிகளை கொள்ளைக்காரர்கள் நின்ற இடத்தைக் குறி வைத்து வீசலானான்.

இந்தத் தீப்பந்தத் தாக்குதலைக் கண்டு கொள்ளைக்காரத் தலைவன், ''இந்த ஜடாமுனி போலுள்ள இன்னும் சில மந்திரசக்தி வாய்ந்தவை அந்தக் குகைக்குள் இருக்கின்றன போலும். அதனால் நாம் சோளக் கதிர் மூட்டைகளை ஆற்றில் தள்ளிவிட்டு, அது ஓடும் திசையில் சென்று, எங்காவது அவற்றைப் பிடித்து இழுத்து, எடுத்துக் கொண்டு போய் விடுவோம்'' என்றான்.

அல்ல. ஒரு மனிதனைத் தான் ஒரு மந்திரவாதி இவ்வாறு உருமாற்றி அனுப்பி இருக்கிறான்'' என்றான். கஜவர்மனும் ''எது எப்படி இருந்தாலும் நாம் செய்ய நினைத்ததை மந்திரவாதியும்,அவனது அடியாளும் செய்கிறார்கள். நாம் சோளக்கதிர் மூட்டையிலுள்ள சொர்ணத்தை விடுவித்துக் கொண்டு வந்து விடலாம்'' என்றான்.

ஜீவதத்தன் தன் பார்வையைக் கொள்ளைக்காரத் தலைவன் இருந்த இடத்தில் செலுத்தியவாறே, ''அந்தக் கொள்ளைக்காரத் தலைவன் துணிச்சல்காரனாக இருக்கிறானே! அவன் ஜடாமுனியைத் தாக்கத் தன் நாலைந்து ஆட்களுடன் பதுங்கிப் பதுங்கி வந்து கொண்டிருக்கிறான், பார்'', என்றான். அதே சமயம் மந்திரவாதி இருந்த

இச்சமயத்தில் குகைக்குள்ளிருந்த மந்திரவாதி ஒரு தீவட்டியைக் கையில் எடுத்து ஆட்டியவாறே ''ஜடாமுனி! அந்தக் கொள்ளைக்காரர்கள் சோளக் கதிர் மூட்டைகளை ஆற்றில் தள்ளி எடுத்துச் செல்ல முயன்றால் அதைத் தடுக்கும்படி ஆற்று பூதத்திடம் கூறு. அவ்வாறு செய்ய முயல்பவர்களை அது விழுங்கட்டும்'' என்று உரத்த குரலில் கூவினான். அதைக் கேட்ட ஜடாமுனி சோளக் கதிர் மூட்டைகளைத் தூக்க முயன்ற கொள்ளைக்காரர்களைப் பிடித்து உயரத் தூக்கி ஆற்றில் விட்டெறியலாயிற்று.

அப்போது ஒரு மனிதனின் குரல், ''என்னைக் காப்பாற்றுங்கள். என்னைக் காப்பாற்றுங்கள்'' என்று அலறியது. அடுத்த வினாடி ஒரு மூட்டை 'தொப்'பென்று ஆற்று நீரில் விழும்

சத்தம் கேட்டது. அதைக் கேட்ட ஜீவ தத்தன் ''கஜா! கேட்டாயா? அது நம் சொர்ணத்தின் குரல் தான். சந்தேகமே இல்லை. அந்த மூட்டை ஆற்றில் முழுகாமல் அடித்துச் செல்லப்படும். அதனால் அதனைக் கரைக்குஇழுத்து, அதிலுள்ள சொர்ணத்தைக் காப் பாற்றும்படி நம் காண்டாமிருகத் தவனிடம் சொல்லி, ஆற்றின் கரை யோரமாகப் போகும்படிக் கூறி அனுப்பு'' என்றான். கஜவர்மனும் அவ்வாறே செய்வதாகக் கூறிவிட்டுச் சென்றான்.

ஜடாமுனியின் பயங்கரத் தாக்கு தலைக் கண்ட கொள்ளைக்காரத் தலைவன் தன் ஆட்களிடம், ''எல் லோரும் ஆற்றின் கரையோரமாக ஓடுங்கள். நாம் ஆற்றில் தள்ளி விட்ட சோளக் கதிர் மூட்டைகளை எங்கா வது கரையில் இழுத்துப் போட்டு எடுத்துக் கொண்டு போக வேண்டும்'' என்று கூறியவாறே ஓடலானான். அப்போது ஜீவதத்தன், ''அடடா! சற் றுத் தாமதித்து விட்டேனே! பரவா யில்லை. இப்போது தாக்குகிறேன்'' என எண்ணி கொள்ளைக்காரர்களைக் குறி வைத்து அம்புகளை எய்யலா னான். ஆனால் தலை தெறிக்க ஓடும் கொள்ளைக்காரர்கள் மீது அந்த அம்பு கள் படவே இல்லை.

அப்போது திடீரெனக் கனத்த மழை பெய்து ஓய்ந்து போயிற்று. அப்போது மந்திரவாதி குகைக்கு வெளியே நின்று தலையை ஆட்டிய வாறே, ''ஜடாமுனி...! நீ எங்கே இருக்கிறாய்? ஒரு சில சோளக்கதிர்



மூட்டைகளையாவது கைப்பற்றி னாயா?'' என்று கேட்டான். ஜடா முனி குகையை நோக்கி நடக்கும் போது சில காண்டாமிருகத்தவர் களைக் கண்டுவிட்டது. அது பயந்து போய் ''குருவே! எமதூதர்கள் ஒற் றைக் கொம்பு எருமைகளின் மீது அமர்ந்து வந்த கொண்டிருக்கிறார் களே! அவர்களது கைகளில் ஈட்டிகள் வேறு இருக்கின்றனவே. என்ன செய்வேன்?'' என்று உரத்த குரலில் கேட்டது.

அதைக் கேட்ட மந்திரவாதி, ''ஜடாமுனியே! பயப்படாதே. வரு பவர்கள் எமகிங்கரர்களல்ல. காண்டா மிருகங்களின் மீது ஏறி உட்கார்ந்து வரும் இந்தக் காட்டு மனிதர்கள் தாம் அவர்கள். முதலில் அவர்களைத் தாக்கி விழுங்கு! பிறகு காண்டாமிரு



கங்களை ஒரு கை பார்'' என்றான். ஜடாமுனியும், ''அப்படியே செய் கிறேன், குருவே! எனக்கு நல்ல ஆகா ரம் கிடைக்கப் போகிறது. மனிதர்கள், அது போக காண்டாமிருகங்கள் வேறு. ஆகா! நல்ல வேட்டை தான்'', என்று கூவியது. அதுகேட்டு ஜீவதத்தனும், கஜவர்மனும் காண்டாமிருகத்தவர் களுக்கு வரப்போகும் ஆபத்தை எண் ணிப் பார்த்து, அவர்களிருந்த இடத் திற்கு விரைந்து சென்றார்கள். அவர் களைத் தாக்க முயன்ற ஜடாமுனியின் மீது அவர்கள் அம்புகளை எய்தார்கள். அவை ஜடாமுனியைத் தாக்கிய போதிலும், அதன் உடலில் அடர்ந்து இருந்த சடைகளின் காரணத்தால் அதற்கு எவ்வித பாதிப்பும் ஏற்பட வில்லை.

ஜடாமுனியும், ''குருவே! யாரோ என்னைக் காட்டு முட்களைக் கொண்டு குத்துகிறார்கள்'', எனக் கத்தவே மந்திரவாதி சுற்றிலும் பார்த்த போது, அவனுக்கு வில்லும், கையு மாக உள்ள ஜீவதத்தனும், கஜவர்ம னும் தென்பட்டனர். மந்திரவாதியும், ''ஜடாமுனி...! உன்னைக் குத்தியது முள் அல்ல, அம்புகள். அவற்றை எய்தவர்கள் க்ஷத்திரியர்களெனத் தெரி கிறது. அவர்களில் ஒருவன் மந்திர தந்திரங்களைக் கற்றவனாகவே இருக்க வேண்டும். என் மந்திரத் தடியை எறிந்து அவர்களை எரித்துச் சாம்பலாக்கி விடுகிறேன்'', எனக் கூறிவிட்டுக் குகைக்குள் சென்றான்.

அப்போது கஜவர்மன், ''ஜீவா! உன் தோற்றம் அந்த மந்திரவாதியை நிலை குலைய வைத்திருக்கிறது. உனக்கும், மந்திர தந்திரங்கள் தெரியும் என்று அவன் அறிந்து கொண்டு விட்டான். அதனால் தான் பயந்து குகைக்குள் ஓடி விட்டான்'' என்றான். ஜீவதத்தனும், ''ஆமாம். முதலில் இந்த மந்திரவாதி யையும், ஜடாமுனியையும் கவனித் தாக வேண்டும். அந்த குகைக்குள் நாமும் செல்வோம்'' என்றான். இருவரும் மந்திரவாதியின் குகைக் குச் சென்றார்கள்.

காண்டாமிருகத்தவரில் மூவர் ஜடாமுனியைச் சூழ்ந்து கொண்டு தம் ஈட்டிகளால் அதனைக் குத்தலா னார்கள். ஆனால் அது துள்ளிக் குதித்து குகையை நோக்கி ஓடியது. ஒரு காண்டாமிருகத்தவன் வேகவேகமாக அதனைத் துரத்திக் கொண்டு சென் றான். வழியில் ஜீவதத்தனை அவன் கண்டதும், ''ஐயா...! ஜடாமுனி

எங்களிடமிருந்து தப்பி ஓடிவிட்டது. ஒரு நீளமான கயிறு மட்டும் எங்களிடம் இருந்திருந்தால் அதனைப் பிடித்துக் கட்டிப் போட்டிருப்போம்'' என்றான்.

ஜீவதத்தனும் ''பரவாயில்லை. விரைவில் அதைப் கட்டிப் போடத் தான் போகிறோம். நீங்கள் இங்கேயே இருங்கள். நாங்கள் இருவரும் அந்த குகைக்குள் போய் மந்திரவாதியையும், அவனது அடியாள் ஜடாமுனியையும் பிடித்துக் கொண்டு வருகிறோம்'', என்றான். இதற்குள் குகையை அடைந்துவிட்ட ஜடாமுனி, ''குருவே! அந்த காண்டாமிருகத்தவர்களுக்குத் துணையாக இரு வீரர்கள் வந்திருக்கிறார்கள். அவர்கள் நம் குகைக்குள் நுழையப் போகிறார்கள் போலிருக்கிறது'', என்று கூறிக் கொண்டே குகையில் நுழைந்தது.

அது சென்ற சற்று நேரத்திற்குப் பிறகு தான் ஜீவதத்தனும், கஜவர்மனும் மந்திரவாதியின் குகைக்குள் சென்றார்கள். ஆனால் மந்திரவாதியோ அல்லது ஜடாமுனியோ அங்கு இருக்கவில்லை. அப்போது கஜ்வர்மன், ''ஜீவா! அந்தப் பயல்கள் மாயமாய் மறைந்துவிட்டார்களே!'' என்றான். ஜீவதத்தனோ ''அப்படிப் பட்ட சக்தி அவர்களிடம் இல்லை. இருந்திருந்தால் கொள்ளைக்காரர்களை லேசில் விட்டிருப்பார்களா?'', என்று கூறியவாறே குகைச்சுவர்களை உற்றுப் பார்த்தான். ஓரிடத்தில் ஒரு சதுரக்கல் சற்று நகர்ந்திருப்பதை



அவன் கவனித்தான். அதை அவன் அழுத்தித் தள்ளவே அது 'பொத்' தென்று உட்புறமாக விழுந்தது.

அங்கு ஏற்பட்ட இடைவெளியின் வழியே அவர்கள் பார்த்தார்கள். யாரும் இருப்பதாக அவர்களது கண்களுக்குப் புலப்படவில்லை. அப்போது ஜீவதத்தன் ''அவர்கள் நம்மை திசை திருப்பவே இவ்வாறு செய்திருக்க வேண்டும். வேறு ஏதோ ஒரு வழியில் தான் அவர்கள் சென்றிருக்கிறார்கள்'' என்றான். கஜவர்மனும், ''ஆம். அப்படித் தான் இருக்கும். காலை வேளையும் வந்து விட்டது'' என்றான். அப்போது ஜீவதத்தன் ''அந்த மங்கிய வெளிச்சத்தில் இந்த குகைக்குள் எதுவும் தெரியாது'', எனக் கூறி ஒரு தீவட்டியை எடுத்துத் தான் பார்த்த இடைவெளி



வழியே விட்டெறிந்தான். அந்த வெளிச்சத்தில் சற்றுத் தள்ளி ஒரு சுரங்கப்பாதை இருப்பதை அவன் கண்டான்.

ஜீவதத்தன் ஆச்சரியப்பட்டவாறே, ''கஜா! இங்கே ஒரு சுரங்கப்பாதை தென்படுகிறது. அந்த மந்திரவாதியும், ஜடாமுனியும் இந்த வழியாகத் தான் தப்பி ஓடி இருக்கிறார்கள். நாம் இந்த வழியில் சென்று பார்ப்போம். அவர்கள் நமக்குக் கிடைத்தாலும் கிடைக்கலாம்'' என்றான்.

இருவரும் அங்கு போய் அச் சுரங்கப் பாதைக்குள் சென்றனர். பாதையில் கற்களே சிதறிக் கிடந்தன. கீழே கிடந்த தீவட்டியை கஜவர்மன் எடுத்துக் கொண்டு நடக்க, ஜீவதத்தன் உருவிய வாளுடன் அவன் பின்னால் சென்றான். அவன் சுரங்கப்பாதைச் சுவரைத் தட்டிப் பார்த்துக் கொண்டு செல்ல, முடிவில் அவர்கள் ஒரு பரந்த வெளியைக் கண்டார்கள். அங்கு இடிந்து கிடந்த மாளிகைகளையும், வீடுகளையும் அவர்கள் கண்டார்கள். சில கோபுர உச்சிகளும் தென்பட்டன.

ஜீவதத்தனும், ''கஜா! இப்போது நாம் ஏதோ ஒரு பாழடைந்த நகரை வந்து அடைந்திருக்கிறோம். இங்குள்ள இடிபாடுகளுக்கிடையே எங்கோ தான் அந்த மந்திரவாதியும், ஜடாமுனியும் ஒளிந்து கொண்டிருக்கிறார்கள்'' என்றான். கஜவர்மனும், ''இங்கே பல சுவர்கள் இடிந்து விழுந்து கிடக்கின்றனவே. அவர்களை எங்கே என்று தேடுவது? நாம் ஓரிடத் தில் தேடும் போது அவர்கள் வேறு ஓர் இடத்தில் மறைந்திருந்து தப்பிப் போய்விடலாம்'' என்றான். ஜீவதத்தனோ, ''அவர்கள் இங்கே தான் இருப்பார்கள். தேடிக் கண்டு பிடித்து விடலாம்'' என்றான். ஆனால் ஜீவதத்தன் கூறியது போல அவ்விருவரும் அங்கே ஒளிந்து கொண்டிருக்கவில்லை. அவர்கள் ஒரு மண்டபத்துள் ஒரு உயரமான இருக்கையில் அமர்ந்திருந்த பெண் பூசாரியின் முன்னால் கைகட்டிக் கொண்டு, நடு நடுங்கியவாறே நின்று கொண்டிருந்தார்கள். அவள் முன் பயங்கரமாக உள்ள மேலும் பலர் உருவிய வாளுடன் நின்று கொண்டிருந்தார்கள்.

பெண் பூசாரியின் கண்கள் கோவைப் பழம் போல் சிவந்திருந்தன. அவள் பற்களை 'நற நற'வென்று

கடித்தவாறே, ''அடே! உங்களது கவனக்குறைவால் இந்த ரகசிய இடம் இரு மனிதர்களுக்குத் தெரிந்து போயிற்றே!'' என்று கர்ஜித்தாள். மந்திரவாதியும், ''எனக்கு அனுமதி கொடுங்கள். அவர்கள் இருவரையும் இப்போதே உங்கள் முன் கொண்டு வந்து நிறுத்துகிறேன்'' என்றான்.

பெண் பூசாரியும், ''அடே! உரித்த வாழைப்பழச் சோம்பேறிகளா! உங்களுக்குச் சிரமம் கொடுக்காமல் அவர்களிருவரும் இப்போது இங்கேயே வந்து விட்டார்கள். அவர்களுக்கு எவ்விதக்காயமோ, அவயவச் சிதைவோ ஏற்படாமல் பிடித்து வர வேண்டும். அவர்கள் தேவிக்கு பலியாகப் போகிறவர்கள். எனவே அவர்கள் யார், எப்படிப்பட்டவர்கள் என்பனவற்றை விவரமாக அறிந்து கொண்டு என்னிடம் தெரிவிக்க வேண்டும்'' என்றான்.

மந்திரவாதியும், ஜடாமுனியும் சரியெனக் கூறிக் கிளம்பி ஒரு பக்கம் செல்ல, பெண் பூசாரியின் வேறு இரு ஆட்கள் இன்னொரு பக்கம் சென்றனர். வழியில் ஜடாமுனி மந்திரவாதியிடம் ''நாம் அந்த இரு மனிதர்களையும் தேடிக் கண்டுபிடித்து அவர்களைக் கொன்றுவிட்டு எங்காவது ஓடிப் போய்விடலாம்'' என்றது.

மந்திரவாதியும், ''ஆமாம். அப்படிச் செய்தால் அந்தப் பெண் பூசாரி காளிக்குப் பலியிட யாருமே இருக்க மாட்டார்கள். அப்போது அவளால் காளி தேவியைத் திருப்திப் படுத்த முடியாது. அதனால் அபூர்வ சக்திகளை அடையவும் முடியாது. அப்போது அவளால் நம்மை ஒன்றும் செய்ய முடியாது. ஆனால் அந்த இருவரும் அவளிடம் அகப்பட்டு விட்டால் நம் கதி அதோகதி தான். இந்தப் பெண் பூசாரியின் தொல்லைகளை இப்போதே நம்மால் தாங்க முடியவில்லை. இவள் தேவியின் அருளைப் பெற்று விட்டால் எப்படியெல்லாம் நம்மை ஆட்டி வைப்பாளோ? எனவே, அவளது முயற்சியை முறியடிக்க வேண்டும். வா! அதோ, அந்த இருவரும் இருக்கிறார்கள். அவர்களைக் கொல்வோம்'', என்றான்.

*(தொடரும்)*



ஒரு நாகரீகத்தின் உயரிய கட்டங்கள், பரம்பரை பரம்பரையாக, உண்மையைக் காண ஆய்வு



# 14. தவ வலிமை – படை வலிமை



அன்றுசோமநாதர் கதை சொல்ல உட்கார்ந்ததும், சேகர் ''தாத்தா! வசிஷ்டரும், விசுவாமித்திரரும் முனிவர்கள் தாமே. முனிவர்கள் விருப்பு, வெறுப் பற்றவர்களாக இருப்பவர்கள். இந் நிலையில் அவர்களிடையே ஏன் பகைமை ஏற்பட்டது?'' என்று கேட்டான். சோமநாதரும், ''மனிதன் விசித்திரமானவன். சில சமயங்களில் சாதுவாகவும், வேறு சில சமயங் களில் கொடூரமாகவும் அவன் ஆகி விடுகிறான். இது விசுவாமித்திரருக் குப் பெரிதும் பொருந்தும். அவர் சாதாரண மனிதன் என்ற நிலையி லிருந்து மாமுனிவர் என்ற நிலைக்கு உயர்ந்தார். அவர் மேலுக்குப் பார்க்கக் கொடூரமானவராகத் தோன்றினாலும் அவரது இயல்பு அப்படிப்பட்ட தல்ல. ஒருவரைப் பற்றி ஒரு முடிவிற்கு வருமுன், அவரது பிறப்பு, வளர்ப்பு, சூழ்நிலை முதலியவற்றை எல்லாம் கூர்ந்து கவனிக்க வேண்டும். விசுவாமித்திரர் கோபமும், ஆத்திரமும் அடைபவரே. ஆனால் அவர் கோபமும், ஆத்திரமும் அடைய என்ன காரணம் என்பதைத் தான் விளக்கப் போகிறேன்'', என்று கூறி விசுவாமித்திரரைப் பற்றிக் கூற லானார்.

விசுவாமித்திரர் சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்த பண்டிதரல்ல. பாமரர் என்றும் அவரைக் கூறிவிட முடியாது. நல்ல மன்னராக கன்யாகுப்ஜம் என்ற நாட்டை அவர் ஆண்டு வந்தார். ஆம். அக்காலத்து மன்னர்களுக்கு இருந்த அகங்காரமும், கர்வமும் அவரிடமும் இருந்தது.

ஒரு முறை அவர் தம் பரிவாரங் களுடன் காட்டிற்கு வேட்டையாடச் சென்றார். உச்சிப் பொழுதாகிவிட,

'பாரதீயன்'



இளைப்பாற அவர் ஆற்றின் கரை யோரமாக இருந்த வசிஷ்டரின் ஆசிர மத்திற்குச் சென்றார். வசிஷ்டர் அவ ரையும், அவரது பரிவாரங்களையும் வரவேற்று, அனைவருக்கும் அப் போதே அறுசுவை உணவு அளித்தார். மிகக் குறைவான நேரத்தில் அவ்வளவு பெரிய கூட்டத்திற்கு விருந்து சாப் பாடு எப்படி ஒரு முனிவரால் அளிக்க முடிந்தது என்று மன்னரான விசுவா மித்திரர் எண்ணி வியப்படைந்தார். அப்போது ஆசிரமவாசிகளில் சிலர் ஆற்றோரமாகப் புல் மேய்ந்து கொண் டிருந்த ஒரு பசுவைச் சுட்டிக்காட்டி, ''அது தெய்வீகச் சக்தி வாய்ந்த 'நந் தினி' என்ற பசு. அது அதன் உடமை யாளர் விரும்பிக் கேட்பதை எல்லாம் கொடுக்கும்'' என்றார்கள்.

''மண்ணும், பொன்னும் விரும் பாத முற்றும் துறந்த முனிவருக்கு எதைக் கேட்டாலும் கொடுக்கக்கூடிய பசு எதற்கு? இந்தப் பசு என்னிடம் இருந்தால் மக்கள் குறைகளை எல் லாம் தீர்ப்பேன். எனவே, இந்தப் பசு என்னிடம் இருந்தால் தான் நல்லது'', என்று விசுவாமித்திரர் எண்ணினார். அதனால் அந்த நந்தினியைத் தனக்குக் கொடுத்துவிடும்படி அவர் வசிஷ்ட ரிடம் கேட்டார். வசிஷ்டரோ, தானாக அதைப் போகச் சொல்ல முடியாது என்றும், அந்தப் பசுவே இஷ்டப்பட் டால் விசுவாமித்திரர் அதை அழைத் துச் செல்லலாமென்றும் கூறினார்.

விசுவாமித்திரருக்குக் கோபம் வந்தது. ஒரு மன்னன் கேட்டு ஒரு சன்னியாசி கொடுக்க முடியாது என்று கூறுவதா என்று ஆத்திரம் அடைந் தார். எனவே, அவர் அந்தப் பசுவைத் தம் அரண்மனைக்கு இழுத்துச் செல் லும்படி வீரர்களுக்குக் கட்டளை இட்டார். ஆனால், அந்த வீரர்களால் அந்தப் பசுவை அணுகக் கூட முடிய வில்லை. ஏதோ ஒரு சக்தி அவர்களை அணுக விடாமல் தடுத்து, அவ்வீரர் களை விரட்டியும் விட்டது.

தலைநகருக்குப் போய் விசுவா மித்திரர் பெரிய படையுடன் வந்தார். அப்போது நந்தினியிலிருந்து வெளி வந்த வீரர்கள் விசுவாமித்திரரின் படை வீரர்களை அடியோடு அழித்து விட்டனர். அதுகண்டு விசுவாமித்திரர் திகைத்துப் போய் அவமானத்தால்




தலை குனிந்து கொண்டார். வசிஷ்டரின் தவ வலிமை தான் நந்தினியைக் காத்துத் தன் படை முழுவதையும் அழித்து விட்டதாக விசுவாமித்திரர் புரிந்து கொண்டார். அதனால் அவர் தனது மன்னர் பதவியைத் துறந்து தவம் செய்யலானார். தவம் நீண்ட காலத்திற்குச் செய்தபோதிலும், தான் மன்னன் என்ற அகங்காரம் அவர் மனதில் இருந்து கொண்டே இருந்தது.

அவர் தொடர்ந்து கடுந்தவம் செய்தார். அவருக்குத் தம் தவ வலிமையைக் காட்ட ஒரு வாய்ப்பு கிட்டியது. திரிசங்கு என்ற மன்னன் தன் உடலோடு சொர்க்கலோகத்திற்குப் போக விரும்பினான். அதனால் வசிஷ்டரிடம் போய்த் தன் பூத உடலோடு சொர்க்கத்திற்குத் தன்னை அனுப்புமாறு வேண்டினான். வசிஷ்டரோ அவ்வாறு செய்வது தவறு எனக் கூறி மறுத்து விட்டார். அப்போது திரிசங்கு விசுவாமித்திரரை அணுகி, தான் தன் உடலோடு சொர்க்கம் போக விரும்புவதைக் கூறி, அதற்கு வசிஷ்டர் உதவ முடியாது என்று சொன்னதையும் விவரித்து, தன்னை உடலோடு அவர் தான் சொர்க்கத்திற்கு அனுப்ப வேண்டுமென வேண்டினான்.

வசிஷ்டரை விடத் தாம் தவத்தால் உயர்ந்து விட்டவர் என்று கூறி விசுவாமித்திரர், ''திரிசங்கு! நீ கவலைப் படாதே! உன்னை நான் என் தவ வலிமையால் உன் உடலோடு சொர்க்கத்திற்கு அனுப்பி விடுகிறேன்'', என்று உறுதியளித்தார். அதற்காக விசுவாமித்திரர் ஒரு யாகம் செய்து தன் தவ வலிமையால் திரிசங்குவை சொர்க்கத்திற்கு அனுப்பினார். ஆனால் இந்திரன் முதலிய தேவர்கள் திரிசங்குவை சொர்க்கத்திற்குள் நுழையக்கூட விடாமல் அவனைக் கீழே தள்ளி விட்டார்கள். ஆனால் விசுவாமித்திரரோ திரிசங்குவைத் தன் தவ வலிமையால் அந்தரத்தில் நிற்க வைத்து, ''என் தவம் முழுவதையும் கொடுத்து, உனக்காக வேறு ஒரு சொர்க்கலோகத்தையே உருவாக்குகிறேன்'', எனக் கூறிப் புதிய சொர்க்கத்தையே ஏற்படுத்திவிட்டார்.

இவ்வாறு சோமநாதர் கூறியதும் சேகர், ''தாத்தா! திரிசங்கு சொர்க்கம் இன்னமும் இருக்கிறதா?'', என்று கேட்டான். அவரும், ''இல்லை தான். இது போன்றவற்றை வெறும் கதைகளாக எடுத்துக் கொள்ளாமல் அவற்

றுள் அடங்கியுள்ள பொருளைப் புரிந்து கொள்ள வேண்டும். அதிகார பலத்தைவிடத் தவ வலிமை தான் மேலானது. உடலின் சக்தியைவிட ஆத்ம பலமே உயர்ந்தது என்பதும் இக்கதையால் விளங்குகிறது. பொதுவாக, யாவரும் பூத உடலை ஆன்மீக வழியில் செல்வதற்குத் தடையாக இருப்பதாகக் கருதுகிறார்கள். ஆனால் ஆன்மீக வழிக்கு உடலும் தேவை தான் என நம்பும் பல மகான்களும் இருக்கிறார்கள்'', என்றார்.

சேகரும், ''தாத்தா! திரிசங்குவும் அப்படி ஏதோ ஒரு நம்பிக்கையில் தானே வசிஷ்டரிடமும், விசுவாமித்திரரிடமும் கேட்டிருக்கிறான்?'' என்று கேட்க, சோமநாதர் ''ஆம். வசிஷ்டருடைய நம்பிக்கை வெறும் உடலோடு சொர்க்கம் போய் விட முடியாது. ஆன்மீக சக்தியால் தான் முடியும் என்பதே. அதனால் தான் அவர் திரிசங்குவை உடலோடு சொர்க்கத்திற்கு அனுப்ப முடியாது என்று மறுத்தார். ஆனால் விசுவாமித்திரரோ, தான் அடைந்த தவ சக்தியால் திரிசங்குவை சொர்க்கத்திற்கு அனுப்ப முயன்று அதில் வெற்றி காண முடியாமல் தன் முழு தவ சக்தியையும் செலுத்தித் திரிசங்குவிற்காக இன்னொரு சொர்க்கத்தை உருவாக்கினார். அது 'திரிசங்கு சொர்க்கம்' என்ற பெயரோடு இருந்து மறைந்து போயிற்று.



வசிஷ்டரோடு போட்டி போட்ட விசுவாமித்திரர் தான் அதுவரை அடைந்த தவத்தின் சக்தியை முழுவதும் இழந்துவிட்டார். மீண்டும் அத்தகைய சக்தியைப் பெற அவர் மறுபடியும் பல ஆண்டுகள் தவம் செய்ய வேண்டியதாயிற்று'' என்றார். சியாமளாவும், ''கோபம், ஆத்திரம், போட்டி, பொறாமை போன்றவை மனிதனுக்கு வந்தால் அவன் பெருத்த நஷ்டத்தையே அடைவான் என்று இக்கதையால் தெரிந்து கொண்டோம்'', என்றாள்.



## அன்று இதே மாதத்தில் பிறந்தவர்

பாவயாமி ரகுராமம் என்ற ராக மாலிகைக் கிருதியை இசை ரசிகர்கள் பல பாடக, பாடகிகள் பாடக் கேட்டிருப் பார்கள். இதை பல வருடங்களுக்கு முன் இயற்றியவர் தாம் சுவாதித் திருநாள் மகாராஜா எனப்படும் ராமவர்மா. இவர் இது போன்ற பல இசைப் பாடல்களை இயற்றியுள்ளார்.

இவர் 1813 ஏப்ரல் 16ல் திருவாங்கூர் அரச குடும்பத்தில் திருவனந்தபுரத்தில் பிறந்தார். இவர் பிறப்பதற்கு முன் திரு வாங்கூர் மன்னர் தனக்கு ஆண் சந்ததி இல்லையே எனக் கவலைப்பட்டார். அவரது சகோதரி இவரைப் பெற்றதும் அந்த மன்னர் தம் சகோதரியின் மகன் தான் திருவாங்கூரின் வருங்கால மன்னர் என மகிழ்ச்சியுடன் அறிவித்தார். இக்குழந் தைக்கு ராமவர்மா எனப் பெயரிட்டு, அரச வம்ச பட்டப் பெயரான குலசேகரர் என்ற பெயரையும் சூட்டினார்கள். ஆனால் இவர் சுவாதித் திருநாள் மகாராஜா என தான் யாவராலும் அழைக்கப்பட்டார். இவரது ஜன்ம நட்சத்திரம் சுவாதி.

'சுவாதித் திருநாள்' தமது 17வது வயதில் 1829 ஏப்ரல் 21ல் திருவாங்கூரின் மன்னரானார். இவர் சிறந்த அறிவாளியாக வும், ஆட்சியாளராகவும் விளங்கினார். இவர் இந்தியாவின் முதலாவது வானிலை ஆராய்ச்சி நிலையத்தை அமைத்தார். பொது மக்களுக்கான நூலகங்களையும், வட்டார நீதிமன்றங்களையும் ஆங்காங்கு ஏற்படுத்தினார். வருமான ஆய்வையும், மக்கள் தொகைக் கணக்கெடுப்பையும் எடுக்கச் செய்தார். ஆங்கில வைத்திய முறைகளையும், ஆங்கிலப் பள்ளிகளை யும் தம் சமஸ்தானத்தில் புகுத்தினார்.

இவர் இசை, இலக்கியம், கலை, வேதாந்தம் ஆகிய துறைகளிலும் புலமை



சுவாதித் திருநாள் மகாராஜா

பெற்றவர். இவரது ஆட்சியில் நுண்கலை களும், இசைக் கலையும் சிறந்து விளங்கி கேரளாவின் பொற்காலம் எனவும் பெயர் பெற்றது. இவ்வாறு இசை, கலைத் துறை களில் இவர் மிகுந்த ஈடுபாடு கொண்டது இவருக்குத் தொல்லைகளையே அளித்தது. அச்சமஸ்தானத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத் தின் பிரதிநிதியாக இருந்த ஜெனரல் கல்லென் இவர் இக்கலைத் துறைகளுக் காகச் செலவு செய்வதை ஆட்சேபித்தார். சுவாதித் திருநாள் கூடிய வரை அக் கட்டுப்பாட்டிற்கு இணங்காமல் இருந்தார். பின்னர் இவர் ஆட்சி விவகாரங்களில் அதிகம் மனம் செலுத்தாமல் இசையிலும், மத விஷயங்களிலும் தம்மை அதிகமாக ஈடுபடுத்திக் கொண்டார். 1846 டிசம்பர் 25ல் இவர் அமரரானார்.

சுவாதித் திருநாள் மகாராஜா சுமார் 400 இசைப் பாடல்களை மலையாளம், சமஸ்கிருதம், தெலுங்கு, கன்னடம், ஹிந்தி ஆகிய மொழிகளில் இயற்றினார். இவை அனைத்தும் பக்தி ரசப் பாடல்களே. இப்பாடல்களின் அமைப்பு இசைக்கு இனிதாய், எளிமையாய், சொற்கட்டுகளு டன் அமைந்துள்ளது சிறப்பானதாகும்.

# இருபதாம் நூற்றாண்டில் இந்தியா

## ஒளி வீசி செயல்படும் ஜனநாயகம் (1977–2000)

நெருக்கடி நிலையை 1975ல் நாடு முழுவதும் பிரகடனப்படுத்தியதால் 1997ல் நடந்த நாடாளுமன்றப் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சி படு தோல்வியை அடைந்தது.

30 ஆண்டு களுக்குப் பின் காங்கிரஸ் அல்லாத அரசாங்கம் பதவியில் அமர்ந்தது. காங்கிரஸ் (ஓ) பாரதீய லோக் தள், ஜன சங்கம் மற்றும் சோஷலிஸ்ட் கட்சி கூட்டாகச் சேர்ந்து ஜனதா கட்சியை உருவாக்கி மொரார்ஜீ தேசாயைத் தம் தலைவராகத் தேர்ந்தெடுத்தது.


மொரார்ஜீ தேசாய்

முன்னாள் மத்திய அமைச்சர் ஜெகஜீவன்ராம் காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகி, ஜனநாயகக் காங்கிரஸ் என்ற கட்சியை அமைத்து, ஜனதாக் கட்சியுடன் பேசி அதற்கு ஆதரவு தந்தார்.

இப்பொதுத் தேர்தலில் ராய் பரேலித் தொகுதியில் போட்டியிட்ட இந்திரா காந்தி தோற்றுப் போனார்.

மார்ச் 21ல் நெருக்கடி நிலை விலக்கிக் கொள்ளப் பட்டது. மார்ச் 24ல் மொரார்ஜீ தேசாய் பிரதம மந்திரியாகப் பதவி ஏற்றார்.

காங்கிரஸ் கட்சிக்கு எதிரான அலை வீச்சு பத்து மாநிலங்களிலும் இரண்டு யூனியன் பகுதிகளிலும் பரவியது. ஜுன் 21ல் என். சஞ்சீவ ரெட்டி குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

காங்கிரஸ் கட்சியிலிருந்து பல இளம் உறுப்பினர்கள் வெளியேறியதால் இந்திரா காந்தி காங்கிரஸ் தலைவர் பதவியை ராஜீநாமா செய்ய வேண்டியதாயிற்று. 1970ல் காங்கிரஸ் அல்லாத கட்சிகள் திரிபுரா, அருணாசலப் பிரதேசம், மேகாலயா, மகாராஷ்டிரம் ஆகிய மாநிலங்களில் ஆட்சியைக் கைப்பற்றின.


என். சஞ்சீவ ரெட்டி

# முதலாவது கூட்டணி அமைச்சரவை

எதிர்க்கட்சி 1979 ஜூலை 11ல் மொரார்ஜீ அரசாங்கத்தின் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டு வந்தது. தேசாய் ஜூலை 15ல் ராஜீநாமா செய்தார். துணைப் பிரதமராக இருந்த சரண்சிங் ஜனதாக் கட்சியை விட்டு வெளிவர மதசார்பற்ற ஜனதாக் கட்சியின் தலைவராக அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சரண்சிங்

ஜூலை 28ல் இந்தியாவின் முதல் கூட்டணி அரசாங்கத்தை அமைத்தார். ஆனால் இது நீண்ட காலம் இருக்கவில்லை. சரண்சிங் ஆகஸ்ட் 20ல் தம் பதவியை ராஜீநாமா செய்தார். குடியரசுத் தலைவர் மக்களவையைக் கலைத்தார்.

ஏழாவது மக்களவைக்கான தேர்தல் 1980 ஜனவரி 2லிருந்து 6 வரை நடந்தது. இந்திரா காந்தி மிகப் பெரும்பான்மை பலத்துடன் பிரதம மந்திரியானார். அத் தேர்தலில் காங்கிரஸ் (ஐ) கட்சி 353 இடங்களைக் கைப்பற்றியது. கர்நாடகம், கோவா, அருணாசலப் பிரதேசம், ஹிமாசலப் பிரதேசம் ஆகிய மாநிலங்களிலும் காங்கிரஸ் கட்சி அதிகாரத்தைக் கைப்பற்றியது. புதுச்சேரி, மணிப்பூர், ஹரியானா, நாகாலாந்து ஆகிய மாநிலங்களில் மற்ற கட்சிகளைச் சேர்த்துக் கொண்டு மந்திரி சபைகளை அமைத்தது. மே மாதத்தில் நடந்த தேர்தலில் குஜராத், ராஜஸ்தான், மத்திய பிரதேசம், ஒரிஸ்ஸா, உத்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் மூன்றில் இரு பங்கு பெரும்பான்மையையும் பஞ்சாப், மகாராஷ்டிர மாநிலங்களில் பெரும் பான்மையையும் காங்கிரஸ் பெற்றது.



இந்திரா காந்தி

பாரதீய ஜனதாக் கட்சி அடல் பிஹாரி வாஜ்பாய் தலைமையில் 1980 ஏப்ரல் 6ல் அமைந்தது. இந்தியா பனிக் கட்டிப் பகுதியான அண்டார்டிகாவில் 1982 ஜனவரி 9ல் தன் விஞ்ஞானிகளை அடி எடுத்து வைக்கச் செய்து பெரும் சாதனை புரிந்தது. இந்த விஞ்ஞானிகள் குழுத் தலைவர் எஸ். காசிம். இந்த விஞ்ஞானிகள் அங்கு சுமார் ஒரு மாத காலம் தங்கி இருந்தனர். அப்பகுதிக்கு 'தட்சிண கங்கோத்ரி' என்றும் பெயரிடப் பட்டது. சர்தார் ஜெயில் சிங் 1982 ஜூலை 25ல் இந்தியக் குடியரசின் ஏழாவது தலை



ஜெயில் சிங்



ஃபரூக் அப்துல்லா

வராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். ஷேக் அப் துல்லா இறந்ததும், அவரது மகன் ஃபரூக் அப்துல்லா 1982 செப்டம்பரில் அம் மாநிலத்து முதலமைச் சராகப் பதவி ஏற்றார்.

பஞ்சாபில் அகாலி தளம் 'ராஸ்தா ரோகோ' இயக்கத்தை 1983 ஏப்ரல் 3ல் துவக்கி எல்லாப் போக்குவரத்து வாகனங்களையும் நகர விடாமல் செய்தது. இந்தப் போராட்டத்தைத் தொடர லட்சம் பேர்கள் கொண்ட படையைத் திரட்டலாயிற்று. ஜெர் னெயில் சிங் பிந்தரன்வாலா தலைமையில் வன்முறை துவங் கியது. இவர் அமி ருத்சரின் பொற் கோவிலுக்குள் மறைந்திருந்து வன்முறைகளைத் தூண்டினார்.



அரசாங்கம் அகாலி தளத் தலைவர் ஹர்சந்த் சிங் லோங்கோவாலுடன் பேச முயன் றும் இயலவில்லை.

♦ அண்டார்டிகாவை அடைந்த முதலாவது இந்தியப் பெண்மணி மேஹர் மூஸ். இவர் 1977ல் அங்கு போய் இறங்கினார்.

# உலகின் மற்ற பகுதிகளில்...

❖ இங்கிலாந்தில் நாடாளுமன்றப் பொதுத் தேர்தலில் 1979 மே 4ல் கன்செர்வெடிவ் கட்சி வெற்றி பெற்று மீண்டும் அதிகாரத்தைக் கைப்பற்றியது. அக்கட்சியின் தலைவி மார்க்கரெட் தாட்சர் பிரதம மந்திரியானார். ஐரோப் பாவிலேயே பிரதம மந்திரியான முதல் பெண்மணி இவரே.



மார்க்கரெட் தாட்சர்

❖ மாஸ்கோவில் 1980ல் நடந்த ஒலிம்பிக் பந்தயப் போட்டிகளை அமெரிக்காவின் தலைமையில் 60 நாடுகள் புறக்கணித்தன. இதற்குக் காரணம் ரஷ்யப் படைகள் ஆப்கா னிஸ்தானத்தில் இருந்தது தான். இந்தியா இப்போட்டிகளில் ஜூலை 29ல், ஹாக்கி விளை யாட்டில் தங்கப் பதக்கத்தை வென்றது.

● உலக சுகாதார சபை 1977 மே மாதத்தில் '2000க்குள் யாவருக் கும் தேக ஆரோக்கியம்' என்ற திட்டத்தை அறிவித்தது.

# இளைஞரான பிரதம மந்திரி!

புதிய அரசியல் வியூகங்களை 1983ல் காணலானோம். அக்டோபர் 8ல் லோக் தளும், பாரதீய ஜனதா கட்சி யும் சேர்ந்து தேசீய ஜனநாயகக் கூட்டமைப்பை ஏற் படுத்தி அதன் தலைவராக அடல் பிஹாரி வாஜ்பாயி யைத் தேர்ந்தெடுத்தது.

செப்டம்பரில் ஐக்கிய முன்னணி என்ற அமைப்பு காங்கிரஸ் (எஸ்) தேசீய சோஷலிஸ்ட் கட்சி, ராஷ் டிரீய காங்கிரஸ் என்ற கட்சிகளைக் கொண்டவை. ஜனதா கட்சியின் தலைவர் சந்திரசேகர் இந்த அணியின் தலைவர்.



ராஜீவ் காந்தி

பஞ்சாப் அரசியலில் 1984ல் ஒரு மாறுதல் ஏற்பட்டது. அமிர்தசரஸ் பொற்கோவிலுள் மறைந்துள்ள பிந் தரன்வாலாவும், அவரது தோழர்களான தீவிரவாதிகளும் சரணடைய வேண்டு மென்று அரசாங்கம் அறிவித்தது. அகில இந்திய சீக்கிய மாணவர் சங்கம் தடை படுத்தப்பட்டது.

மே மாதத்தில் அகாலிகள் பொற் கோவிலைச் சுற்றியுள்ள ஆயுதப் படை கள் வாபஸ் பெறப்பட வேண்டுமென கோரினார்கள். தமக்குத் காலிஸ்தான் என்ற தனிநாடு வேண்டுமென்றும் கோரினார்கள். ஆனால் ஆயுதப் படை கள் 'ஆபரேஷன் ப்ளூ ஸ்டார்' எனப் பட்ட கடும் தாக்குதலை ஆரம்பித்தது. கடும் துப்பாக்கிச் சூட்டில் பிந்தரன் வாலாவும், சீக்கிய மாணவர் சங்கத் தலைவர் அம்ரீக் சிங்கும் உயிரிழந்தனர்.

சீக்கியருக்கு எதிராக எடுக்கப்பட்ட நடவடிக்கையால் நாட்டின் பல பகுதி களில் வன்முறைகள் தலை தூக்கின.

இந்திரா காந்தி தனது இல்ல அலுவலகத்தில் இரு சீக்கியக் காவலாளிகளால் சுட்டுக் கொல்லப்பட்டார். கல்கத்தாவில் இருந்த அவ ரது மகனும், காங்கிரஸின் செயலாளருமான ராஜீவ் காந்தி டில்லிக்கு வர வழைக்கப்பட்டு பிரதம மந்திரியாக்கப்பட்டார்.

இந்திரா காந்தி கொலை யுண்டதும், டில்லியிலும் மற்ற இடங்களிலும், சீக்கியர்களுக்கு எதிராக ஆர்ப்பாட்டங்கள் நடை பெற்றன. டில்லியில் தொடர்ந்து சீக் கியர்கள் இரு நாட்கள் தாக்கப்பட்டு ஆண், பெண், குழந்தைகளென 2000 பேர்கள் பலியாயினர்.

பஞ்சாபிலும், அஸ்ஸாமிலும் இல் லாமல் மற்ற மாநிலங்களில் மக் களவைக்குத் தேர்தல்கள் நடந்தன. 504 இடங்களில் 401 இடங்களை காங் கிரஸ் (ஐ) கைப்பற்றியது. இது அது வரை காங்கிரஸ் அடைந்திராத மகத் தான வெற்றி.

டிசம்பர் 31ல் ராஜீவ் காந்தி பிரதம மந்திரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்போது அவரது வயது நாற்பது.

வான வெளியில் ஸ்குவாட்ரன் லீடர் ராகேஷ் சர்மா ரஷ்ய விண்வெளி

வீரர்களுடன் சேர்ந்து சோயஸ்-டி11 என்ற விண்கலத்தில் 1984 ஏப்ரல் 4ல் ஒரு வார காலம் பயணம் செய்த பின் திரும்பி வந்தார்.



ராகேஷ் சர்மா

இந்திய விமானப் படையைச் சேர்ந்த இவர் விண்வெளிக்குப் போய் வந்த முதலாவது இந்தியர் என்ற பெருமையைப் பெற்றார்.

- இந்தியாவிலேயே உருவாக்கப் பட்ட செயற்கைக் கோள் 'பாஸ்கரா-1' ரஷ்ய தளத்திலிருந்து 1979 ஜூன் 7ல் விண்வெளியில் செலுத்தப்பட்டது.



பிரகாஷ் பட்கோனே

- இந்தியாவின் பிரகாஷ் பட்கோனே 1979ல் லண்டனில் விளையாடி உலக பாட்மிண்டன் சாம்பியன் பட்டத்தைப் பெற்றார்.
- கங்கை நதியில் கட்டப்பட்ட மகாத்மா காந்தி பாலம் 1982 மார்ச் 2ல் திறக்கப்பட்டது. உலகிலேயே மிக நீளமான இப்பாலம் 5.575 கி.மீ. நீளமானது.

# உலகின் மற்ற பகுதிகளில்...

- விண்வெளிப் பயணத்தில் கொலம்பியா என்ற விண்கலம் விமானம் போலப் பறந்து பின்னர் திரும்பித் தரை இறங்கியது. இச்சாதனை 1981 ஏப்ரலில் நிகழ்த்தப்பட்டது.
- அமெரிக்க ஜனாதிபதி ரோனால்ட் ரீகன் 1983 மார்ச் 23ல் 'ஸ்டார் வார்' திட்டத்தை



ரோனால்ட் ரீகன்

அறிவித்தார். இது அமெரிக்க விண்வெளிப் பரப்பை அணு வெடிகளால் தாக்க முடியாமல் செய்யும் தற்காப்பு எனவும், அணு ஆயுதங்களைக் குவித்து வைத்துக் கொள்ளும் திட்டமுமாகும்.

# பஞ்சாபில் அமைதி உடன்பாடு

போபாலில் 1984 டிசம்பர் 3ல் நடந்த விஷவாயுக் கசிவால் ஏற்பட்ட உயிர்ச் சேதம் மறக்க முடியாததாகும். போபாலிலுள்ள ஒரு ரசாயனத் தொழிற் சாலையில் ஏற்பட்ட இந்த விஷ வாயுக் கசிவு 3000க்கும் மேற்பட்டவர்களை பலி கொண்டது. ஆயிரக் கணக்கானவர்கள் உயிருக்குப் பயந்து தம் வீடுகளை விட்டு ஓடிப்போயினர். எவ்வளவோ பேர்கள் மருத்துவமனைகளில் சிகிச்சை பெற்றனர்.

'ப்ளூ ஸ்டார்' என்ற ராணுவ நடவடிக்கைக்குப் பின் சீக்கியர்கள் அதனை மறக்காது பழி வாங்கத் துடிக்கவே, மத்திய அரசாங்கம் அவர்களை சமாதானப்படுத்த முயன்றது.

பிரதம மந்திரி ராஜீவ் காந்தியும், சந்த்லோங்கோவாலும் 1985 ஜூலை 24ல் ஒரு சமாதான உடன்படிக்கையில் கையொப்பமிட்டனர். இது பற்றி லோங்கோவால் ஒரு சீக்கியர் கூட்டத்தில் சங்க்ரூரில் ஆகஸ்ட் 20ல் விளக்கிக் கொண்டிருக்கையில் சுட்டுக் கொல்லப்பட்டார். இது காலிஸ்தான் கோரிய தீவிரவாதிகளின் செயல்.

செப்டம்பரில் பஞ்சாபில் தேர்தல்கள் நடத்தப்பட்டது. ஐக்கிய அகாலி தளம் தேர்தலைப் புறக்கணித்தது. ஆனால் வேறு ஒரு பிரிவினர் தேர்தலில் கலந்து கொண்டனர். அகாலித் தலைவர் சுர்ஜித் சிங் பர்னாலா பஞ்சாபின் முதலமைச்சரானார்.

கட்சித் தாவல் தடுப்புச் சட்டம் 1985ல் இயற்றப்பட்டது. மக்களவை உறுப்பினர்களும், மாநிலங்களின் சட்ட மன்ற உறுப்பினர்களும் கட்சி மாறாமலிருக்கச் செய்வதே இதன் நோக்கம். இச்சட்டம் 1985 ஜனவரி 30 முதல் நடைமுறைப்படுத்தப்பட்டது.

இந்தியக் குடியரசின் எட்டாவது தலைவராக ஆர். வெங்கடராமன் 1986 ஜூலை 25ல் பதவி ஏற்றார். யூனியன் பகுதிகளாக அருணாசலப் பிரதேசமும், மிஜோராமும் 1987 பிப்ரவரி 20ல் முழு மாநிலத் தகுதியைப் பெற்றன. மே 20ல் கோவாவும் மாநிலத் தகுதி பெற்றது.


ஆர். வெங்கடராமன்.

போர்த்துக்கீசிய ஆதிக்கத்திலிருந்த டையூ, டாமன் சேர்க்கப்பட்டு யூனியன் பகுதியாக இருக்கலாயிற்று.

ஸ்ரீலங்காவில் தமிழர் பிரச்சினைக்கு முடிவு காண ராஜீவ் காந்தி கொழும்பு சென்றார். அங்கு அந்நாட்டு அதிபர் ஜெயவர்த்தனேயுடன் ஒரு உடன்படிக்கையில் 1987 ஜூலை 27ல் கையொப்பமிட்டார். இதன்படி இந்தியா இலங்கைக்கு அமைதி காக்கும் படை அனுப்பும்.

மேலும் தமிழர் அதிகமாய் வாழும் வடகிழக்குப் பகுதியில் ஆட்சி




மன்றத்திற்குத் தேர்தல்கள் இந்தியாவின் மேற்பார்வையில் நடக்கும். ஆனால் இச்சமயம் தமிழ் ஈழ விடுதலைப் புலிகள் என்ற ஒரு அமைப்பு வி. பிரபாகரனின் தலைமையில் அமைந்தது. இவர்களது 'படைகள்' கொரில்லாப் போர் புரிந்து, ஸ்ரீலங்காவின் படைகளை எதிர்த்துப் போரிடலாயின.

இந்திய அமைதி காக்கும் படை ஸ்ரீலங்காவில் இரண்டாண்டு காலத்திற்கு இருந்தது.

- கல்கத்தாவில் தரும மிஷனரிகளை 1950ல் அன்னை தெரஸா நிறுவி தொண்டு புரிந்து வந்தார். இவரது நற்பணிக்காக 1979 அக்டோபர் 17ல் இவருக்கு நோபல் பரிசு வழங்கப்பட்டது. இந்தியாவின் மிக உயர்வான 'பாரத ரத்னா' விருது 1980 ஜனவரியில் இவருக்கு அளிக்கப்பட்டது.



அன்னை தெரஸா

# உலகின் மற்ற பகுதிகளில்...

- ரஷ்ய அதிபர் மிகெய்ல் கோர்ப்பசேவ் சோவியத் ஆட்சி முறையை மாற்றச் சில வழிகளைப் புகுத்தினார். ஒன்று வெளிப்படை அணுகுமுறை. மற்றது பெரெஸ்ட்ரியோகா எனப்படும் சீரமைப்பு. இவை இரண்டு மைய அரசிலிருந்து மாநிலங்களுக்கு அதிகாரங்கள் கொடுத்தல், சிறிய அளவில் தாராளமயச்



மிக்கெயில் கோர்ப்பசேவ்

சந்தையை அனுமதித்தல் ஏன்பனவாம். இது 1985ல் கொண்டு வரப்பட்டது. மேலும் ஆயுதப் போட்டியைக் கட்டுப்படுத்த அமெரிக்க ஜனாதிபதி ரோனால்ட் ரீகனுடன் பேச்சு வார்த்தை இவர் நடத்தினார்.

- காம்பேக்ட் டிஸ்க் (சி.டி.) முதன்முதலில் 1978ல் மேற்கு ஜெர்மனியில் அறிமுகப்படுத்தப்பட்டது.



# அரசாங்கங்கள் வந்து போயின

ஒன்பதாவது நாடாளுமன்ற தேர்தல் 1989 நவம்பரில் நடந்தது. அதில் எக்கட்சிக்கும் பெரும்பான்மை கிடைக்கவில்லை. காங்கிரசிற்கு 193 இடங்களே கிடைத்தன. ஜனதா தளத்திற்கு 141 இடங்களும், பாரதீய ஜனதா கட்சி 88 இடங்களும், கம்யூனிஸ்ட் மார்க்சிஸ்ட் 42 இடங்களும் பெற்றன.



வி.பி. சிங்

நவம்பர் 29ல் ராஜீவ் காந்தி ராஜீநாமா செய்ய, தேசிய முன்னணி அரசை அமைக்க முன் வந்தது. பல கட்சிகள் சேர்ந்த இந்த அணியின் தலைவராக வி.பி. சிங் தேர்ந்தெடுக்கப்பட்டார். பாரதீய ஜனதா கட்சி இவருக்கு வெளியிலிருந்து ஆதரவை அளித்தது. டிசம்பர் 2ல் வி.பி.சிங் பிரதம மந்திரியாகப் பதவி ஏற்றார்.

மண்டல் கமிஷனின் சிபாரிசுகளின் படி சமூக, கல்வித் துறைகளில் பின் தங்கி இருப்பவர்களுக்கு 27 சதவிகித இட ஒதுக்கீடு செய்ய அரசாங்கம் தீர்மானித்தது. இதைக் கல்லூரி மாணவர்களும், பள்ளி மாணவர்களும் எதிர்த்து ஆர்ப்பாட்டம் செய்தனர். சிலர் தீக்குளிக்கவும் செய்தனர். அரசாங்கம் எல்லாக் கல்வி நிறுவனங்களையும் 1990ல் ஒரு மாத காலத்திற்கு மூடி வைத்தது. டில்லியில் ஆரம்பித்த இக்கிளர்ச்சி நாடெங்கும் பரவியது.

ஜனதா தள் நவம்பர் 5ல் பிளவுபட்டு 70 மக்களவை உறுப்பினர்கள் தம் பிரிவிற்கு சந்திரசேகரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். பாரதீய ஜனதா கட்சி வி.பி. சிங்கிற்கு ஆதரவு அளிப்பதை விலக்கிக் கொண்டது. காங்கிரஸ் கட்சி சந்திரசேகருக்கு ஆதரவு அளித்தது.



சந்திரசேகர்

வி.பி. சிங் நம்பிக்கை வாக்கெடுப்பில் தோற்கவே, அவர் ராஜீநாமா செய்தார். நவம்பர் 10ல் சந்திரசேகர் பிரதம மந்திரியாகப் பதவி ஏற்றார்.

இவரது அரசாங்கமும் நீண்ட காலம் இருக்கவில்லை. காங்கிரஸ் கட்சி அவருக்குக் கொடுத்த ஆதரவை விலக்கிக் கொள்ளவே அவர் 1991 மார்ச் 6ல் பதவி விலகினார்.

பத்தாவது மக்களவைக்கான தேர்தல் இரு கட்டங்களில் நடந்தது. முதலாவது கட்டம் மே 20ல் முடிந்தது. அப்போது தேர்தல் பிரசாரத்தில் இறங்கிய ராஜீவ் காந்தி மே 21ல் ஒரு தேர்தல் கூட்டத்தில் பேச தமிழ் நாட்டில் சென்னைக்கு அருகே உள்ள ஸ்ரீபெரும்புதூருக்குச் சென்றார்.

அவர் ஸ்ரீபெரும்புதூரில் அமைக்



பி.வி. நரசிம்ம ராவ்

கப்பட்டிருந்த மேடையை நோக்கிச் சென்று கொண்டிருந்த போது ஈழ விடுதலைப் புலிகளால் அனுப்பப்பட்ட பெண் மனித வெடிகுண்டிற்குப் பலியாகி இறந்தார். இரண்டாவது கட்டத் தேர்தல் 20 நாட்களுக்குப் பின் நடைபெற்றது. தேர்தலில் காங் கிரஸும், அதன் தோழமைக் கட்சி களும் 220 இடங்களை வென்றன.

பி.வி. நரசிம்மராவ் காங்கிரஸ் கட்சியின் தலைவதாகத் தேர்ந்தெடுக் கப்பட்டார். அவர் பிரதம மந்திரியாக ஜூன் 21ல் பதவி ஏற்றார்.

♦ இசைக் குயில் லதா மங்கேஷ்கர் 25,000 பாடல்களை 20 இந்திய மொழிகளில் பாடியிருந்ததற் காக 'கின்னஸ்' புத்தகத்தின் 1984வது ஆண்டுப் பதிப்பில் இடம் பெற்றார்.



# உலகின் மற்ற பகுதிகளில்...

❖ அணுக் கசிவு காரணமாக உலகி லேயே மிகத் துயரமான விபத்து ரஷ்யாவின் செர்னோப்யல் அணு இயக்கி மையத்தில் தீப் பிடித்ததால் வெடித்து அணுத் துகள்களைப் பல நாடுகளுக்கும் பரவச் செய்தது.

1986 ஏப்ரல் 26ல் நிகழ்ந்த இச்சம்பவத்தால் இந்தியா வரை பாதிப்பு ஏற்பட்டது.

❖ ஈராக் படைகள் குவைத்துள் 1990 ஆகஸ்ட்டில் புகுந்ததை வளை குடாப் போர் எனக் கூறு கிறார்கள். அரப் லீக் நாடுகள் ஈராக் குவைத்தை விட்டுப் போய்விட வேண்டுமென்று கூறின. சௌதி அரேபியா கேட்டுக் கொண்டதன் பேரில் அமெரிக்கா ஈராக்கைத் தாக் கியது. 1991 பிப்ரவரியில் போர் நிறுத்தம் ஏற்பட்டது.

● ஸ்வீடனின் ஒரு நிறுவனம் 1979ல் முதல் செல்லுலர் போனை அறிமுகப் படுத்தியது.



# ஒரு மசூதி, ஓர் அணைக்கட்டு பற்றிய தகராறு


சங்கர் தயாள் சர்மா

*சங்கர் தயாள் சர்மா 1992 ஜுலை 17ல் இந்தியாவின் ஒன்பதாவது குடியரசுத் தலைவர் ஆனார். உத்திரப் பிரதேசத்தில் அயோத்தியில் இருந்த பாபர் மசூதி 1992 டிசம்பர் 6ல் ஒரு சிலரால் இடிக்கப்பட்டு விட்டது. அந்த இடத்தில் ராமர் கோயில் இருந்ததாகவும், அது இடிக்கப்பட்டு அம்மசூதி கட்டப்பட்டதாயும் வாதப் பிரதிவாதங்கள் எழுந்தன. இந்த சம்பவத்தால் நாடு முழுவதிலும் கொந்தளிப்பு ஏற்பட்டு ஆங்காங்கே மதக்கலவரங்களும் மூண்டன. ஒரு வார காலத்துள் ஆயிரம் பேர்கள் கொல்லப்பட்டனர். இதனால் உத்திரப் பிரதேசம், ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம், இமாசலப் பிரதேசம் ஆகிய மாநிலங்களின் ஆட்சியிலிருந்த பாரதீய ஜனதா அரசாங்கங்கள் பதவி நீக்கம் செய்யப்பட்டன.*

*மகாராஷ்டிர மாநிலம் 1993ல் பூகம்பத்தால் பாதிக்கப்பட்டது. லட்டூர், ஒஸ்மானாபாத் மாவட்டங்களில் 10,000க்கும் மேற்பட்டவர்கள் இறந்து போயினர்.*

*மகாராஷ்டிராவில் மற்றொரு கிளர்ச்சி ஏற்பட்டது. நர்மதை நதியில் சர்தார் சரோவர் அணைக்கட்டின் உயரத்தை குஜராத் அரசாங்கம் உயர்த்த முடிவு செய்ததை மகாராஷ்டிரம் ஆட்சேபித்தது. இவ்வாறு உயர்த்துவதால் சுற்றுப்புறச் சூழலும், மனித வாழ்க்கையும் பாழாகிவிடுமென அஞ்சப் பட்டது.*

*1993 ஆகஸ்டில் மகாராஷ்டிர அரசாங்கம் இதனால் பாதிக்கப்படும் மக்களைக் குடி அமர்த்த உறுதிமொழிகளை அளித்ததன் பேரில் கிளர்ச்சி நிறுத்திக் கொள்ளப்பட்டது.*

*ஜம்மு–கஷ்மீரில் 1994ல் குடியரசுத் தலைவரின் ஆட்சி மேலும் ஆறு மாதங்கள் நீட்டிக்கப்பட்டது. அங்கு வன்முறை தொடர்ந்து கொண்டே இருந்தது. பாகிஸ்தான் உலக மனித உரிமை கமிஷன் முன் ஒரு தீர்மானத்தை பிப்ரவரி 26ல் கஷ்மீர் நிலை பற்றிக் கொண்டுவர முயல, இந்தியா அதனை எதிர்த்தது. நடுவர் தீர்ப்பிற்கும் அதனைவிட இந்தியா சம்மதிக்கவில்லை.*

*கஷ்மீரில் தீவிரவாதிகள் 1995 ஜுலையில் அயல்நாட்டு சுற்றுலாப் பயணிகளைத் தாக்கி அவர்களில் ஆறு பேர்களைச் சிறைப்பிடித்தனர். அவர்களை விடுவிக்க இந்தியச் சிறைகளிலுள்ள 17 தீவிரவாதிக் கைதிகளை விடுவிக்க வேண்டுமென நிபந்தனை விதித்தனர். அவர்கள் பாகிஸ்தானிலிருந்தும், ஆப்கானிஸ்தானிலிருந்*

தும் வந்த கூலிப் படைகளாதலால் அவர்களை விடுவிக்க முடியாது என்று இந்தியா கூறியது.

ஸ்ரீநகர் அருகே சரார்-எ-ஷெரீப் என்ற மசூதியை 1995 மே 11ல் தீவிரவாதிகள் எரித்தனர். அதனைப் பாகிஸ்தான் கூலிப்படைகள் தம் வசம் இரண்டு மாதங்கள் வைத்திருந்தனர். இந்த மசூதி வளாகத்தில் சூஃபீ மகான் ஷேக் நூருத்தீன் நூருணியின் உடல் அடக்கம் செய்யப்பட்டிருந்தது. இந்த மகான் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாடுபட்டவர்.

ஷேக் அப்துல்லா இந்த மசூதியைப் புதுப்பித்ததும், இங்கு ஏராளமான ஹிந்துக்களும், முஸ்லிம்களும் வரத் தொடங்கினார்கள்.

- ஹைதராபாதில் நடந்த உலகச் சதுரங்கப் போட்டியில் 2000 ஜூலை 4ல் எஸ். விஜயலட்சுமி முதலிடம் பெற்று உலகின் முதலாவது பெண் கிராண்ட் மாஸ்டர் ஆனார்.



# உலகின் மற்ற பகுதிகளில்...

- தென் ஆப்பிரிக்காவில் கருப்பர் இனத்தவருக்காகப் போராடிய நெல்சன் மண்டேலா 26 ஆண்டுகளுக்குப் பின் 1990 பிப்ரவரி 11ல் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார்.



- இரண்டு ரஷ்ய விண்வெளி வீரர்கள் விண்கலத்தில் பறந்தவாறே 175 நாட்கள் இருந்து 1979ல் சாதனை படைத்தனர்.
- ஜப்பானில் தயாரிக்கப்பட்ட வாக்மன் 1979ல் உலகச் சந்தையில் பிரபலமாகி அமோக விற்பனை பெற்றது.



# அணு சோதனைத் தடை ஒப்பந்தத்திற்கு இந்தியா எதிர்ப்பு


ஹெச்.டி. தேவகௌடா

இந்தியாவின் வரலாற்றில் 1996ம் ஆண்டு நினைவில் வைக்கப்பட வேண்டிய வருடம். அந்த ஓராண்டிற்குள் மூன்று பிரதம மந்திரிகள் வந்து போயினர். மக்களவைக்கு நடந்த 11வது பொதுத் தேர்தலில் காங்கிரஸ் தன் பெரும்பான்மையை இழந்தது. நரசிம்ம ராவ் ராஜீநாமா செய்தார்.

மிக அதிக இடங்களைப் பெற்ற பாரதீய ஜனதா கட்சி மற்றும் 11 கட்சிகளின் உதவியுடன் அரசாங்கம் அமைத்தது. இதன் தலைவரான அடல் பிஹாரி வாஜ்பாயி மே 16ல் பிரதம மந்திரியாகப் பதவி ஏற்றார்.

ஆனால் மே 28ல் நம்பிக்கை வாக்குப் பெற முடியாததால் அவர் பதவி விலகினார். அதன் பின் ஐக்கிய முன்னணி என்று ஒன்று உருவாகி, 13 கட்சிகளின் கூட்டில் ஹெச்.டி. தேவ கௌடாவைத் தலைவராகத் தேர்ந்தெடுக்க அவர் ஜுன் 10ல் பிரதம மந்திரியாகப் பதவி ஏற்றார்.

அணு சோதனைத் தடை ஒப்பந்தத்தை இந்தியா–ஜெனிவாக் கூட்டத்தில் எதிர்த்தது. அணு ஆயுதங்கள் உற்பத்தி செய்யும் நாடுகள் தாம் சுற்றுப்புறச் சூழலை மாசுபடுத்த மாட்டோம் என்று வாக்குறுதி தராத வரை இந்த ஒப்பந்தத்திற்கு மதிப்பே இல்லை என இந்தியா கூறியது. இதனை பல நாடுகள் வரவேற்றன.

இந்தியா 1997ல் இரு பிரதம மந்திரிகளைக் கண்டது. தேவகௌடா கோரிய நம்பிக்கைத் தீர்மானத்தை மக்களவை ஏப்ரல் 11ல் ஏற்கவில்லை. இதற்குக் காரணம் காங்கிரஸ் முன்னணிக்கு அளித்து வந்த ஆதரவை விலக்கிக் கொண்டதே. இதன்பின் ஐ.கே. குஜ்ரால் முன்னணியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படவேஅவர் ஏப்ரல் 21ல் பிரதம மந்திரியாகப் பதவி ஏற்றார். அவரது மந்திரி சபையும் நீண்ட காலம் இருக்கவில்லை. காங்கிரஸ் நவம்பர் 28ல் தான் முன்னணிக்குக் கொடுத்த ஆதரவை விலக்கிக் கொண்டது. அவர் பதவி விலகினார். மக்களவை கலைக்கப்பட்டு மீண்டும் தேர்தலை நடத்தும் படிக் குடியரசுத் தலைவர் உத்தரவு


ஐ.கே. குஜ்ரால்

பிறப்பித்தார்.



கே.ஆர். நாராயணன்

கே.ஆர். நாராயணன் குடியரசுத் தலைவராக 1997 ஜூலை 25ல் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

தமிழ்நாட்டில் 1991ல் ராஜீவ் காந்தி தேர்தல் பிரசாரத்தைத் தொடங்கச் சென்ற போது மனித வெடிகுண்டு அவரைத் தாக்கிக் கொன்றது. வெடி குண்டு கலாச்சாரம் தலைதூக்கி 1998 பிப்ரவரி 14ல் கோவையில் 18 இடங்களில் குண்டுகள் வெடித்தன. இதனால் 84 பேர்கள் உயிரிழந்தார்கள். ஒரு வெடிகுண்டு பாரதீய ஜனதாக் கட்சித் தலைவர் எல்.கே.அத்வானி பேச இருந்த மேடையருகே வெடித்தது. இதற்கெல்லாம் ஒரு முஸ்லிம் அமைப்பு பொறுப்பேற்றது.

- உலகக் கிரிக்கெட் இறுதிப் போட்டியில் இந்தியா முதல் தடவையாக 1993 ஜூன் 25ல் வென்று உலகக் கோப்பையைப் பெற்றது. வெஸ்ட் இண்டீஸை இந்தியா 43 ஓட்ட வித்தியாசத்தில் தோற்கடித்தது. 1932ல் இந்தியா இதே தேதியில் முதலில் இங்கிலாந்து லார்ட் மைதானத்தில் கிரிக்கெட்டை ஆடத் தொடங்கியது.

# உலகின் மற்ற பகுதிகளில்...

- ஐரோப்பாவில் கம்யூனிஸம் சரிந்து விழவே ஒரு காலத்தில் வலிமையானது எனக் கருதப் பட்ட சோவியத் யூனியன் கலைந்து சிறு, சிறு நாடுகளாயின. போரிஸ் எல்ஸ்டின் கோர்ப்பசேவை பதவியை விட்டு விலக நிர்பந்தித்து அதிகாரத்தைத் தாமே ஏற்றார். ரஷ்யக் குடியரசின் தலைவராக எல்ஸ்டின் 1991 டிசம்பர் 24ல் பதவி ஏற்றார்.



போரிஸ் எல்ஸ்டின்

- காந்திஜீயின் வாழ்க்கையைச் சித்தரிக்கும் திரைப்படம் 1982ல் திரையிடப்பட்டது. இதன் இயக்குனர் ரிச்சர்ட் ஆடென்பரோ. இப்படம் எட்டு ஆஸ்கார் விருதுகளைப் பெற்றது. சிறந்த படம், சிறந்த நடிப்பு, சிறந்த இயக்குனர் எனப் பல துறைகளில் இது பரிசு பெற்றது. இதில் காந்தியாக நடித்தவர் பென் கின்ஸ்லி.

# இந்தியா தன் அணுசக்தியைக் காட்டுகிறது

மக்களவைத் தேர்தல் 1998 மார்ச்சில் நடந்தது. எந்த அரசியல் கட்சிக்கும் பெரும்பான்மை கிடைக்கவில்லை. பாரதீய ஜனதா கட்சியும் அதன் தோழமைக் கட்சிகளும் 277 இடங்களைப் பெற்றன. காங்கிரசிற்கு 141 இடங்களே கிடைத்தன.


வாஜ்பாய்

வாஜ்பாயி அவரது கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு பிரதம மந்திரி பதவியை ஏற்று மக்களவையில் நம்பிக்கை வாக்குகளையும் பெற்று வெற்றி பெற்றார்.

இந்தியா மீண்டும் அணுகுண்டு வெடிப்புச் சோதனையை போக்ரானில் 1998 மே 11ல் நடத்தியது. இரண்டு நாட்களுக்குப் பின் மீண்டும் ஒரு குண்டை வெடித்து வெற்றியை உறுதி செய்து கொண்டது. இந்தியா அணு சக்தி நாடென உலகம் அறிந்தது.

பீஹார், ஆந்திரப் பிரதேசம், ஜம்மு, கஷ்மீர், டில்லி, திரிபுரா ஆகிய பகுதிகளிலும் பயங்கரவாதம் தலை தூக்கியது. நேபாளத்து காட்மாண்டுவிலிருந்து டில்லி வர வேண்டிய இந்திய விமானம் டிசம்பர் 24ல் கடத்தப்பட்டு, மறுநாள் ஆப்கானிஸ்தானின் காண்டஹாரில் தரை இறங்கியது. ஆறு நாட்கள் பேச்சுவார்த்தைகள் நடந்த பின் விமான சிப்பந்திகளும், 189 பயணிகளும் விடுவிக்கப் பட்டனர்.



இந்தியாவும், பாகிஸ் தானும் புது டில்லிக்கும் லாகூருக்குமிடையே பஸ்களை விட ஒப்புக் கொண்டன. பிரதம மந்திரி வாஜ்பாயி 1999 பிப்ரவரி 20ல் சென்ற முதல் பஸ்ஸில் பயணம் செய்தார். மறுநாள் இரு நாடுகளுக்கிடையே நட்புறவு ஏற்பட்டதை அறிவித்து லாகூர் பிரகடனம் வெளியிடப்பட்டது. ஆனால் இது பாகிஸ்தானால் மீறப்பட்டது. அது கார்கில் பகுதியில் பல இடங்களைக் கைப் பற்ற முயன்றது. இந்தியா சிறு போர் செய்து தன் நாட்டினுள் நுழைய முயன்றவர்களை விரட்டி அடித்தது. இந்தப் போர் 1999 மே 26லிருந்து 74 நாட்கள் நீடித்தது.

வாஜ்பாயி அரசாங்கம் ஒரு ஓட்டு வித்தியாசத்தில் மக்களவையில் ஏப்ரல் 17ல் தோற்கடிக்கப்பட்டது. மக்களவை ஏப்ரல் 26ல் கலைக்கப்பட்டது.



செப்டம்பரில் தேர்தல் நடைபெற்றது. பாரதீய ஜனநாயகக் கூட்டணி 269 இடங்களைப் பெற்றது. தெலுகு தேசம் கட்சி இக்கூட்டணிக்கு ஆதரவு தரவே, வாஜ்பாயி பிரதமர் பதவி ஏற்று 1999 அக்டோபர் 13ல் அமைச்சரவை அமைத்தார்.

- ஜாகர்த்தாவில் 1985ல் நடந்த ஓட்டப் பந்தயங்களில் இந்தியா சார்பில் கலந்து கொண்ட பி.டி. உஷா ஐந்து தங்கப் பதக்கங்களையும், ஒரு வெண்கலப் பதக்கத்தையும் வென்றார். இது இந்தியப் பெண் விளையாட்டு வீராங்கனைகளிலேயே மகத்தான சாதனையாகக் கருதப்படுகிறது.



- விஸ்வநாதன் ஆனந்த் 2000 டிசம்பர் 24ல் டெஹ்ரானில் உலகச் சதுரங்கப் போட்டியில் முதல் இடத்தைப் பெற்றார். உலகச் சாம்பியன் பட்டத்தைப் பெற்ற முதல் ஆசியக்காரர் இவரே.



## உலகின் மற்ற பகுதிகளில்...

- அமெரிக்க அதிபர் பில் கிளின்டனின் தூண்டுதலால் 45 ஆண்டுகளாக உள்ள பாலஸ்தீனப் பிரச்சினையைத் தீர்க்கப் பேச்சுவார்த்தைகள் தொடங்கின. இஸ்ரேல் பிரதமர் யிட்ஜக்ராபினும், பாலஸ்தீன



யாசர் அராபத்

விடுதலை இயக்கத் தலைவர் யாசர் அராபத்தும் கூடிப் பேசினார்கள்.

- உடாஹா பல்கலைக் கழக மருத்துவர்கள் 1982 டிசம்பர் 2ல் ஃபைபர் கண்ணாடியாலும், பாலியுராதேனாலும் ஒரு செயற்கை இருதயத்தை உருவாக்கி 61 வயதான ஒருவருக்குப் பொருத்தினார்கள்.



# அமெரிக்காவும், ரஷ்யாவும் இந்திய நிலையை ஆதரிக்கின்றன

அமெரிக்க அதிபர் கிளின்டனும், ரஷ்ய அதிபர் விளாடிமிர் புடினும் 2000ல் இந்தியாவிற்கு விஜயம் செய்தது குறிப்பிடத்தக்க தாகும். கிளின்டன் மார்ச் 19, 20 தேதிகளில் இந்தியாவில் இருந்தார்.


பில் கிளின்டன்

20 ஆண்டுகளுக்குப் பின் ஓர் அமெரிக்க அதிபர் இந்தியா வந்தது சிறப்பான தாகும். அவர் கஷ்மீரில் பயங்கர வாதத்தைக் கண்டித்ததோடு எல்லைக் கோட்டை மதித்து பாகிஸ்தான் இந்தியாவுடன் பேச்சுவார்த்தைகள் நடத்த வேண்டுமெனக் கூறினார்.

ரஷ்ய அதிபர் அக்டோபர் 2ல் வந்து நான்கு நாட்கள் இந்தியாவில் இருந்தார். இந்திய பாகிஸ்தான் தகராறில் மூன்றாவது நாடு தலையிடக்கூடாதென அவர் அறிவித்தார். அணுசக்தி தொடர்பாய் இந்தியாவும், ரஷ்யாவும் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டன.

மத்திய பிரதேசத்திலிருந்து சத்தீஸ்கட்டும், பீஹாரிலிருந்து ஜார்க்கண்டும், உத்திரப் பிரதேசத்திலிருந்து உத்தராஞ்சலும் 2000ல் மூன்று தனி மாநிலங்கள் அமைக்கப்பட்டன.


விளாடிமிர் புடின்

ஐம்பது ஆண்டுகளாக இருந்து வரும் அரசியல் நிர்ணயச் சட்டத்தை மறு ஆய்வு செய்ய வேண்டுமென வாஜ்பாயி அரசாங்கம் நினைத்தது. இதற்காக தேசிய கமிஷன் ஒன்றையும் அது நியமித்தது.

மேலும் மக்களவையின் உறுப்பினர் தொகை இன்னும் 25 ஆண்டுகளுக்கு 545–ஆகத்தான் இருக்க வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

கஷ்மீரில் பயங்கரவாதம் நிலவுகையில் இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்குமிடையே பேச்சுவார்த்தைகள் நடக்கவே முடியாது. எல்லையின் இரு புறங்களிலும் துப்பாக்கிச் சூடுகள் நடக்கையில், ஒரு தரப்புப் போர் நிறுத்தம் என்ற துணிகர முடிவை வாஜ்பாயி நவம்பர் 19ல் எடுத்து ரம்ஜான் மாதத்தில் போர் இல்லை என அறிவித்தார்.

அவர் இப்போர் நிறுத்தத்தை 2001 ஜனவரி 26 வரை நீட்டிப்பதாக டிசம்பர் 26ல் அறிவித்தார்.

இதனால் இதுவரை ஐ.நா.வில் கஷ்மீர் சுயநிர்ணயம் பற்றிய தீர்மானங்களுக்கு எவ்வித மதிப்பும் இல்லை என அவர் தெளிவாகக் கூறிவிட்டார்.

(முற்றிற்று)



# ஏற்ற மருமகள்

கரும்பூரில் கருப்பைய்யா என்ற நடுத்தர விவசாயி இருந்தான். அவன் தன் மகள்களில் மூத்தவளான மாலா வின் திருமணத்தைச் செய்துவிட் டான். இனி, அடுத்து இளைய மக ளான கலாவின் திருமணத்தைச் செய்து விட்டால் கவலை இல்லை என நினைத்தான். அதற்காகக் கலா வுக்கு ஏற்றவனைத் தேடலானான். ஒரு நாள் அவ்வூர் ஆலயத்திற்குப் போய் சுவாமி தரிசனம் செய்துவிட்டு மண்டபத்தில் உட்கார்ந்து, தன் இளைய மகளின் திருமணம் பற்றி யோசிக்கலானான்.

அப்போது கோவில் வாசலில் ஒரு குதிரை வண்டி வந்து நின்றது. அதில் இருந்து ஒரு பணக்காரர் இறங்கிக் கோவிலுக்குள் வந்தார். சுவாமியை கும்பிட்டுவிட்டு அர்ச்சகரிடம், ''ஐயா! இந்த ஊரில் கருப்பைய்யா என்ற விவசாயியின் வீடு எங்கே இருக்கிறது?'', என்று கேட்டார். அர்ச்சகரும், ''அதோ உட்கார்ந்திருக் கிறாரே, அவர் தான் கருப்பைய்யா'', என்று காட்டினார்.

அந்த பணக்காரர் கருப்பைய்யா வின் அருகில் போய், ''என்னப்பா கருப்பைய்யா...! சௌக்கியமா?'', என்று கேட்டார். அதைக் கேட்டு கருப்பைய்யா தன்னை உரிமையு டன் கூப்பிடுபவர் யார் எனப் பார்த் தான். ஒரிரு விநாடிகள் பார்த்த அவனை பணக்காரரும் பார்த்து, ''கருப்பைய்யா! என்னைத் தெரிய வில்லையா? நான்தான் உன் பள்ளித் தோழன் சுப்பைய்யா'' என்றார். அப் போது கருப்பைய்யா, ''ஆ...! சுப் பைய்யாவா? முப்பது வருடங்க ளுக்கு முன் பார்த்தது. அப்போது நீ ஒரு பணக்காரரின் பெண்ணை

– சிவனார் செல்வன் –



மணந்துகொண்டு, வீட்டோடு மாப் பிள்ளையாகப் போனாய். அடே யப்பா...! இப்போது பெரிய பணக் காரனாகிவிட்டாய் போலிருக்கிறதே! சரி, வா என் வீட்டிற்குப் போய் எல்லாம் சாவகாசமாகப் பேசலாம்'', என்று கூறி எழுந்து, அவனை அழைத் துக் கொண்டு வீட்டிற்குச் சென்றான்.

கருப்பைய்யா வீட்டில் தன் மனைவியையும், கலாவையும் அறி முகம் செய்து வைத்தான். அப்போது சுப்பைய்யா, ''கருப்பைய்யா! எனக்கு இரண்டும் மகன்கள். மகள் என்று இல்லை. நானும் உன் போல விவ சாயி தான். என் மகன்களையும் விவ சாயத்தில் தான் ஈடுபடுத்தி இருக்கி றேன். விவசாயம் எங்களுக்கு உயிர் போன்றது. என் மனைவிக்கும் விவ சாயத்தில் மிகுந்த ஈடுபாடு உள்ளது. அவள் தனக்கு வரும் மருமகள்களும் தன்னைப் போல விவசாயத்தில் ஈடுபாடு கொண்டவர்களாக இருக்க வேண்டுமென்றே விரும்புகிறாள். என் மூத்த மருமகள் விவசாயக் குடும்பத்திலிருந்து வந்தவள். இப் போது என் இளைய மகனுக்கும் ஒரு விவசாயக் குடும்பத்துப் பெண் ணையே மணம் செய்து வைக்க விரும்புகிறேன். உன்னைப் பற்றி நன்கு தெரியும். உன் மகள் கலாவை இப்போது தான் பார்த்தாலும் அவ ளுக்கு என் வீட்டு மருமகளாக வரத் தகுதியும் இருப்பதாகத் தெரிகிறது'' என்றார்.

அதுகேட்டு கருப்பைய்யா மகிழ்ந்து போய், ''இப்படி நீ சொல் வதே நானும் என் மகளும் செய்த புண்ணியம். இதை எம் பெரும் பாக் கியமாகக் கருதுகிறோம். என்னால் அதிக வரதட்சிணை, சீர்வரிசை என் றெல்லாம் கொடுக்க முடியாது. ஆனா லும் என் சக்திக்கு ஏற்ப சிறப்பாகச் செய்கிறேன்'' என்றான். சுப்பைய் யாவோ ''நான் ஏழையாக இருந்து வரதட்சிணை எதுவும் பெறாமல் தானே மணம் புரிந்து கொண்டேன். அதுபோல என் மகனுக்கும் வர தட்சிணை, சீர்வரிசை என்று எதையும் எதிர்பார்க்கவில்லை. என் விவசாயக் குடும்பத்திற்கு ஏற்ற, அனுசரணை யாக உள்ள பெண்ணாக இருந்தால் போதும்'' என்றார்.

கருப்பைய்யாவும், ''உன்பேச்சில் இருந்து உனக்கு என் மகளை மரு மகளாக ஏற்க முழு வதும் சம்மதம்



என்று தெரிகிறது. நீ உன் ஊருக்குப் போய் முகூர்த்தம் வைப்பது பற்றிக் கடிதம் எழுது'' என்று கூறவே, சுப்பைய்யாவும் தன் நண்பனிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்படத் தயாரானான். அப்போது கலா வேக வேகமாக ஓடிவந்து ''கொஞ்ச நேரத்தில் மழை கொட்டப் போகிறது. அதனால் சற்று நேரம் கழித்துப் புறப்படுங்கள்'' என்றாள்.

கருப்பைய்யாவும், சுப்பைய்யாவும் ''உனக்கு மழை வரும் என்று எப்படித் தெரியும்?'', என்று கேட்கவே, அவளும் அவர்களை வீட்டின் கொல்லைப் புறத்திற்கு அழைத்துச் சென்றாள். அங்கு ஓரிடத்தைக் காட்டி, ''பாருங்கள். எறும்புகள் தம் வெள்ளை முட்டைகளை எடுத்துக் கொண்டு புற்றிலிருந்து வெளியே வந்து கொண்டிருக்கின்றன. கோழி இறக்கை விரித்துக் கத்தி அங்கு மிங்கும் ஓடுவதைப் பாருங்கள். ஈசல்கள் 'ஞொய்' என்ற சத்தத்துடன் பறப்பதைப் பாருங்கள். இவை யாவும் மழை வருவதற்கான அறிகுறிகள் என்று தானே விவசாயிகள் நம்புகிறார்கள்'', என்றாள்.

அதுகேட்டு சுப்பைய்யா, ''பேஷ்! பேஷ்!! இதை எல்லாம் தெரிந்து வைத்திருக்கிறாயே. நீ என் வீட்டு மருமகளாக வரத்தக்கவளே'' என்றார். அவர்கள் அங்கிருந்து வீட்டிற்குள் வந்ததுமே, மழை பெய்ய ஆரம்பித்து அது பெருத்த மழையாகவும் ஆகியது. சுப்பைய்யாவும், ''கலா சொன்னது சரியாய் போய் விட்டதே'' என்று மகிழ்ச்சி ததும்பக் கூறினார். பிறகு தன் ஊருக்கு அவரே கிளம்பிச் சென்றான்.

சுப்பைய்யா தன் மனைவியிட

மும், மகனிடமும் கருப்பையா வையும், அவனது மகள் கலாவையும் பற்றிக் கூறி அவர்கள் இருவரையும் கரும்பூருக்கு அனுப்பி வைத்தான். அவர்களும் கலாவைப் பார்த்துவிட்டு திருப்தி அடைந்தார்கள். சுப்பைய்யா வின் மனைவி கலாவிடம், ''மாமா வுடன் பெரியவனும், சின்னவனும் சேர்ந்தால் லாபமா, அல்லது பார்வை யற்றவனும், கூனனும் சேர்ந்தால் லாபமா? இதற்கு பதில் சொல்கி றாயா?'' என்று கேட்டாள்.

கலாவும் ''விவசாயத்தில் வயலில் உழைக்க யார் சேர்ந்தாலும் லாபமே'' என்றாள். அப்போது சுப்பைய்யா வின் மகன், ''சரி. நவக்கிரகங்களில் பெரியவன் சூரியன். மிகச் சிறியது புதன். அதுபோல் பார்வையற்றவன் என்றால் சுக்கிரன். கூனன் என்றால் சனி. பிரபா என்றால் அம்புலி, அதா வது சந்திரன். சந்திரனோடு சூரி யனோ, புதனோ அல்லது சுக்கிரனோ, சனியோ சேர்ந்தால் மழை வரும். நம் கிரக நிலையும் சரியாக இருந்தால் வயலில் நல்ல விளைச்சலைத் தரும் என விவசாயக் குடும்பத்தவர்கள் நம்புகிறார்கள். நீயும் அம்மாதிரி குடும்பத்தில் வந்திருப்பதால் என் தாயாரும் மகிழ்ச்சி அடைகிறாள். நானும் திருப்தி அடைகிறேன்'' என் றான். கலாவும் ''இவை யாவும் அனு பவப்பூர்வமாகக் கூறப்பட்டவை. இவற்றையே நம்பிக் கொண்டிருக்க முடியாது. நம் உழைப்பையே முக் கியமாக நம்ப வேண்டும். வரப்பு கட்டினால் வயலில் நீர் உயரும். நீர் உயர்ந்தால் நெற்பயிர் உயரும். நெற் பயிர் உயரக் கதிர் உயரும். அதனால் நல்ல விளைச்சலைக் கண்டு யாவரும் சுகமாக இருக்கலாம்'' என்றாள்.

கலா சொன்னதைக் கேட்டு சுப்பைய்யாவின் மனைவியும், மக னும் முழுக்க முழுக்கத் திருப்தி அடைந்தார்கள்.

சுப்பைய்யாவின் மனைவி ''கலா என் வீட்டிற்கு ஏற்ற மருமகள் தான்'' என்று கூறினாள். விரைவிலேயே கலாவுக்கும், சுப்பைய்யாவின் மக னுக்கும் விமரிசையாய்த் திருமணம் நடைபெற்றது.



62. அசுவமேத யாகம்

# மகாபாரதம்

தருமரின் பட்டாபிஷேகத்திற்குப் பின் கிருஷ்ணர் கொஞ்ச நாட்கள் ஹஸ்தினாபுரத்தில் இருந்துவிட்டுத் தம் தந்தை வசுதேவரைக் காண சாத்தியகியுடனும், சுபத்திரையுடனும் புறப்பட்டு துவாரகையைப் போய்ச் சேர்ந்தார். வசுதேவரும் போர் பற்றிய விவரங்களைக் கிருஷ்ணர் சொல்லக் கேட்டார். தன் பேரன் அபிமன்யு இறந்து போனது கேட்டு அவர் கண்ணீர் வடித்தார்.

தருமர் அசுவமேத யாகத்திற்கு வேண்டிய பணத்தை இமயமலையிலிருந்து எடுத்துவரத் தீர்மானித்தார். பாண்டவர்கள் திருதராஷ்டிரன், குந்தி தேவி, காந்தாரி ஆகிய பெரியோர்களிடம் விடை பெற்றுக் கொண்டு இமயமலையை நோக்கிச் சென்றார்கள். காடுகளையும், மலைகளையும் கடந்து மருத் தன் செல்வத்தை விட்டுச் சென்ற இடத்தை அவர்கள் அடைந்தார்கள். சிவபிரானையும், குபேரனையும், மணிபத்திரனையும் வழிபட்ட பின், அவர்கள் அங்கு நிலத்தைத் தோண்டினார்கள். அங்கு பல வித செம்புகளும், குடங்களும், கிண்ணிகளும், பலகைகளும், ஆசனங்களும் அவர்களுக்குக் கிடைத்தன. அவை யாவும் தங்கத்தால் செய்யப்பட்டவை.

அவற்றை எடுத்துச் செல்ல நூற்றுக்கணக்கான ஒட்டகங்களும்,





குதிரைகளும், ரதங்களும் தேவைப் பட்டன. அவற்றை எல்லாம் எடுத்துக் கொண்டு பாண்டவர்கள் ஹஸ்தினாபுரத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அசுவமேத யாகத்திற்கான ஏற்பாடுகள் ஆரம்பிக்கப்பட்டுவிட்டது கண்டு கிருஷ்ணர் பிரத்யும்னனையும், சாத்தியகியையும் அழைத்துக் கொண்டு ஹஸ்தினாபுரத்திற்குச் சென்றார். அவர்களுடன் சாம்பனும், சாருதேஷ்ணனும், கதனும், கிருதவர்மனும், பலராமனும், சுபத்திரையும் சென்றனர். திருதராஷ்டிரனும், விதுரனும் அவர்களை வரவேற்றார்கள். கிருஷ்ணர் யுயுத்சுவின் வீட்டில் தங்கினார்.

இச்சமயத்தில் உத்தரைக்குக் குழந்தை பிறந்தது. அக்குழந்தை அழாமலும், அசையாமலும் இருக்கவே எல்லோரும்துயரப்பட்டார்கள். சுபத்திரையும், துரௌபதியும் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தனர். அப்போது கிருஷ்ணர் சாத்தியகியுடன் அங்கு வந்தார். குந்தி கிருஷ்ணரைப் பார்த்து, ''கிருஷ்ணா! அசுவத்தாமனின் அடாத செயலால் இப்படி ஒரு குழந்தை பிறந்துள்ளது. இதனை நீ தான் காப்பாற்ற வேண்டும்'' என்று வேண்டினாள். கிருஷ்ணரும் தம் பாதத்தால் அக்குழந்தையை மெதுவாகத் தடவினார்.

அடுத்த விநாடியே அக்குழந்தை கை, கால்களை ஆட்டிக் கொண்டு பலமாகக் கத்தி, சிரித்தது. அதனால் எல்லோரும் மகிழ்ந்தார்கள். பாண்டவ வம்சம் தழைக்க பரீட்சித்தது போல அக்குழந்தையின் செயல் இருந்ததால் அதற்குப் 'பரீட்சித்து' என்று பெயரிட்டார்கள். பரீட்சித்து பிறந்த ஒரு மாதத்திற்குப் பிறகு பாண்டவர்கள் இமயமலையிலிருந்து பெரும் செல்வத்துடன் ஹஸ்தினாபுரத்திற்கு வந்தார்கள். பாண்டவர்களை யாவரும் குதூகலத்துடன் வரவேற்றார்கள். அவர்கள் தமக்குப் பேரன் பிறந்ததைக் கேட்டு பெரும் மகிழ்ச்சி அடைந்தார்கள். மரக்கட்டை போல் கிடந்த குழந்தைக்கு கிருஷ்ணர் தான் உயிர் கொடுத்தார் என்பதைக் கேட்டு, அவர்கள் கிருஷ்ணருக்கு நன்றி செலுத்தினார்கள்.

அசுவமேத யாகம் செய்வதற்காக தருமர் முதலில் வியாசர் மற்றும் கிருஷ்ணருடைய அனுமதி பெற்றார். சித்திரைப் பௌர்ணமியன்று அவர் யாக தீட்சையை ஏற்றார். யாகக் குதிரையை சாஸ்திரப்படி குதிரை

களைப் பற்றி நன்கு அறிந்த தேரோட்டிகளும், பிராம்மணர்களும் தேர்ந்தெடுத்தார்கள். அக்குதிரையைத் தான் பூவுலகில் எல்லா நாடுகளிலும் சுற்றி வரச் செய்ய வேண்டும்.

தருமர் யாக தீட்சை ஏற்று உட்கார்ந்து விட்டதால், நாட்டை ஆளும் பொறுப்பை பீமன் நகுலனின் உதவியுடன் ஏற்றான். அர்ஜுனன் யாகக் குதிரையைக் காத்துக் கொண்டு எல்லா நாடுகளுக்கும் போய்வரச் சம்மதித்தான். சகாதேவன் குடும்ப விஷயங்களைக் கவனிக்கும் பொறுப்பை ஏற்றான். யாகக் குதிரையுடன் செல்லும் அர்ஜுனனிடம் தருமர், ''அர்ஜுனா! உன்னை எதிர்க்க வரும் மன்னர்களுடன் மட்டும் போர் புரி. தானாக வந்து பணிந்து போகும் மன்னர்களுக்கு நேசக்கரம் நீட்டு. நமது இந்த யாகத்திற்கு எல்லா மன்னர்களிடமும் அவர்கள் வந்து கலந்து கொள்ள வேண்டும் என்ற அழைப்பையும் விடுத்து வா'' என்று அறிவுரை கூறினார்.

தருமர் யாகக் குதிரையை மலர்களால் அர்ச்சனை செய்து அர்ஜுனனிடம் ஒப்படைத்தார். அர்ஜுனனும் தனது வில்லான காண்டீபத்தைக் கையில் எடுத்துக் கொண்டு யாகக் குதிரையின் பின்னால் சென்றபோது நகர மக்கள் உற்சாகத்துடன் வழியனுப்பி வைத்தார்கள். அர்ஜுனனுடன் ஒரு படையும் சென்றது.

போர் அவசியம் என்றாலே போர் புரிய வேண்டுமென தருமர் அறிவுரை கூறிய போதிலும், நிலைமை அவ்வாறு இருக்கவில்லை. அர்ஜுனன் சில மன்னர்களுடன் கடும் போர் கூடப் புரிய வேண்டியதாயிற்று. கிராதகர்களையும், யவனர்களையும் அவன் எதிர்த்துப் போர் புரிந்து எளி





தில் அவர்களைத் தோற்கடித்தான்.

பாரதப் போரில் அர்ஜுனன் திரிகர்த்தனைக் கொன்றானல்லவா? அதனால் ஆத்திரம் கொண்டிருந்த திரிகர்த்தனின் மகன்களும், பேரன்களும் தம் நாட்டிற்கு அர்ஜுனன் வந்த போது யாகக் குதிரையைப் பிடிக்க முயன்றார்கள். முதலில் அர்ஜுனன் அவர்களிடம் நல்ல விதமாகப் பேசிப் பார்த்தான். அவர்கள் அதைக் கேளாமல் அவனைத் தாக்கினார்கள். அதனால் அர்ஜுனன் தன்னை எதிர்த்த திரிகர்த்தனின் மூன்று புதல்வர்களைக் கொல்லவே மற்றவர்கள் பயந்து பணிந்து போனார்கள்.

இதைப்போலவே, பிராக்ஜோதிஷத்தில் பகதத்தனின் மகன் வஜ்ஜிரதத்தன் அர்ஜுனனை எதிர்த்தான். அர்ஜுனன் அவனைத் தோற்கடித்து யாகத்திற்கு வந்து சேரும்படி கூறினான். அடுத்து அவன் சைந்தவர்களுடன் போர் புரிந்தான். அவர்களது தாயார் துச்சலை திருதராஷ்டிரனின் மகள். அவள் தன் பேரனை ரதத்தில் உட்கார வைத்து, "இவன் என் பேரன். உன் பேரன் பரீட்சித்தைப் போன்றவன். எனவே இவனுக்கு இரக்கம் காட்டி சைந்தவர்களை விட்டுவிடு" என்று வேண்டினாள். அவனும் சைந்தவர்களை விட்டுவிட்டு அந்நாட்டிலிருந்து சென்றான்.

அர்ஜுனன் யாகக் குதிரையுடன் மணிப்புரத்தை அடைந்தான். அதன் மன்னன் பப்ருவாகனன். அவன் அர்ஜுனனுக்கும் சித்திராங்கதைக்கும் பிறந்தவன். தன் தந்தை தன் நாட்டிற்கு வந்திருக்கிறார் என்று அறிந்ததும் சில பிராம்மணர்களை அழைத்துக் கொண்டு மிகுந்த உற்சாகத்துடன் அவன் அர்ஜுனனைக் காணச் சென்றான். அவனது இந்த செயலைக் கண்ட அர்ஜுனன் மிகவும் கோபம் கொண்டு, "நீ க்ஷத்திரியன் தானே? நான் உல்லாசப் பயணமா செய்து கொண்டு வருகிறேன்? கையில் ஆயுதம் ஏந்தி அசுவமேத யாகக் குதிரைக்கு நான் பாதுகாப்பாக வந்து கொண்டிருப்பது உனக்குத் தெரியவில்லையா? நீ இந்தக் குதிரையைப் பிடித்துக் கட்டிவிட்டு என்னுடன் போரல்லவா புரிந்திருக்க வேண்டும்? இப்படி பிராம்மணர்களோடு வந்து என்னை வரவேற்பது சரியல்ல" என்று கடிந்து கொண்டான்.

அப்போது உலூசி என்ற நாக கன்னிகை ப்ருவாகனனிடம், "நான்

கூட உனக்குத் தாய்முறை தான். இந்த அர்ஜுனன் இப்போது போர் வெறி பிடித்து அலைகிறான். இவனோடு போர் புரிந்து உன் திறமையைக் காட்டு'' என்றாள்.

பப்ருவாகனனும் உடனே அர்ஜுனனோடு போர் புரியத் தயாராகிவிட்டான். இருவரிடையே கடும்போர் நிகழ்ந்தது. கடுமையாகப் போர் புரிந்த இருவருமே போர்க் களத்தில் நினைவிழந்து விழுந்து விட்டனர். சித்திராங்கதை ஓடிவந்து தன் மகனின் மயக்கத்தை முதலில் போக்கினாள். பிறகு அர்ஜுனனின் மயக்கத்தைப் போக்க முயன்று சற்றுத் தாமதமாகவே அவள் கண்ணீர் வடித்துப் புலம்பினாள்.

தன் தந்தை தன்னால் தான் இறந்து விட்டார் என்று எண்ணி பப்ருவாகனன் தீக்குளிக்கத் தயாரானான். அப்போது உலூசி வந்து, தன் மாயா ஜாலத்தால் தான் அர்ஜுனன் மயக்கமுற்றுக் கிடக்கிறான் எனக்கூறி அவனுக்கு நினைவு வரச் செய்தாள். அர்ஜுனன் பப்ருவாகனனைக் கட்டித் தழுவியவாறே சித்திராங்கதையும், உலூசியும் போர்க் களத்தில் இருப்பது கண்டு, ''நீங்கள் இருவரும் இங்கே ஏன் வந்தீர்கள்?'' என்று கேட்டான்.

அவர்களும் அங்கு நடந்ததைக் கூறவே அர்ஜுனனும் பப்ருவாகனனைப் பாராட்டினான். அவனை தருமர் நடத்தும் அசுவமேத யாகத்திற்கு வருமாறு அழைத்தான். அதன்பின் அர்ஜுனன் அங்கிருந்து மகத நாட்டின் தலைநகரமான ராஜக்கிருகத்தை



அடைந்தான். அந்நாட்டு மன்னன் அர்ஜுனனோடு போர் புரிந்து தோற்றான். அவனையும் யாகத்திற்கு வரச் சொல்லிவிட்டு அர்ஜுனன் அங்கிருந்து கிளம்பினான்.

யாகக் குதிரையின் பின் சென்ற அர்ஜுனன் மிலேச்சர்களையும், நிஷாதர்களெனப்படும் வேடர்களையும், காந்தார நாட்டின் மன்னனாக உள்ள சகுனியின் மகனையும் வென்று தென்பகுதியில் ஆந்திரர், திராவிடர், ஒரியர் ஆகியோரையும் போரில் வென்று முடிவில் ஹஸ்தினாபுரத்தை வந்தடைந்தான்.

யாகத்திற்கான ஏற்பாடுகள் அங்கு வேகமாக நடந்து கொண்டிருந்தன. அதைக் காண லட்சக் கணக்கான மக்கள் வந்தார்கள். மன்னர்கள் வந்தார்கள். பண்டிதர்கள் வந்தார்கள். கிருஷ்ணர், பலராமர், சாத்தியகி,

பிரத்யும்னன், சாம்பன், கதன், கிருதவர்மா என்று பல பிரமுகர்கள் வந்து சேர்ந்தார்கள். பப்ருவாகனன் சித்திராங்கதையுடனும், உலூசியுடனும் வந்து சேர்ந்தான்.

அசுவமேத யாகம் மிகவும் விமரிசையாக நடைபெற்றது. தருமர் யாகத்திற்கு வந்த எல்லோருக்கும் சிறப்பாக தானங்களைச் செய்தார். யாகம் வெகு நன்றாக நடந்தது என்றும், தான தர்மங்கள் சிறப்பாகச் செய்யப்பட்டன என்றும் எல்லோரும் தருமரைப் பாராட்டினார்கள்.

தருமரும், ''யாகம் சிறப்பாக நடந்து முடிந்தது என் ஒருவனால் மட்டுமல்ல. முதியோர்களும், அறிஞர்களும் அளித்த அறிவுரைகளாலும், என் தம்பிகள் செய்த மகத்தான உதவிகளாலும் யாகம் சிறப்புற நடைபெற்றது. யாகத்திற்கான பணத்திற்கு எங்கே போவது எனத் திகைத்த போது இமயமலைப் பகுதியில் மருத் விட்டுச் சென்ற அளவற்ற செல்வம் பற்றித் தெரிய வந்தது. அதை எடுத்து வந்ததால் தான் தானங்களைச் சிறப்பாகச் செய்ய முடிந்தது. பிராம்மணர்களுக்கும், முனிவர்களுக்கும் தட்சிணை வாரி வழங்க முடிந்தது. மன்னர்களையும் தக்கபடி கௌரவிக்கவும் என்னால் முடிந்தது. எல்லா நாட்டு மன்னர்களும் யாகத்திற்கு வந்து என்னை கௌரவித்தது நான் செய்த பெரும் பாக்கியம்'', என்றார்.

அப்போது ஒரு கீரிப்பிள்ளை அங்கு வந்து, ''நீங்கள் எல்லோரும் என்னவோ இந்த யாகம் நடந்ததை மிகவும் பாராட்டுகிறீர்கள். குரு க்ஷேத்திரத்தில் வசித்து வரும் ஒரு முனிவர் செய்த சத்துமா தானம் இதை விட மிகவும் உயர்ந்தது'' என்றது.

அதைக் கேட்ட எல்லோரும் ஆச்சரியப்பட்டு, ''நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? முறைப்படி நடந்த இந்த யாகத்தில் நீ என்ன தவறைக் கண்டாய்? அதைச் சொல்!'', என்று கேட்டார்கள்.



## Statement about Ownership of CHANDAMAMA (Tamil)

Rule 8 (formVI), Newspaper (Central) Rules, 1956

| | |
|---|---|
| 1. Place of Publication | 82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |
| 2. Periodicity of Publication | MONTHLY<br>1st of each calendar month |
| 3. Printer's Name<br>Nationality<br>Address | B. VISWANATHA REDDI<br>INDIAN<br>82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097. |
| 4. Publisher's Name<br>Nationality<br>Address | B. VISWANATHA REDDI<br>INDIAN<br>82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |
| 5. Editor's Name<br>Nationality<br>Address | B. VISWANATHA REDDI (Viswam)<br>INDIAN<br>82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |
| 6. Name and Address of individuals who own the paper | Chandamama India Ltd.<br>Board of Directors:<br>1. Vinod Sethi<br>2. B. Viswanatha Reddi<br>3. P. Sudhir Rao<br>82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |

*I,* **B. Viswanatha Reddi,** *do hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

1st March 2001

B. VISWANATHA REDDI
*Publisher*




# மகனின் கடமை

மகேந்திரபுரியின் மன்னன் மரகத சேனன் நல்ல மன்னன், நீதி தவறாதவன், நேர்மையானவன் என்று மக்கள் அவனைப் பாராட்டி வந்தார்கள். அவனது மகன் விஜயசேனன். அவன் அரசன் கற்க வேண்டிய தர்ம சாஸ்திரம், போர்க் கலைகள் என எல்லாம் கற்று சிறந்து விளங்கினான். அதனால் மரகதசேனன் ஆட்சியை மகனிடம் கொடுத்துவிட எண்ணினான். அதற்கு முன் தன் மகனைப் பரீட்சித்துப் பார்க்க வேண்டும் என அவன் நினைத்தான்.

ஒரு நாள் மரகதசேனன் தன்னுடன் விஜயசேனனை தர்பாருக்கு அழைத்துச் சென்றான். தர்பார் ஆரம்பமானதும் அமைச்சர் மன்னனிடம், ''அரசே! தங்களைக் காண ஒரு தாயும், அவளது மகனும் வந்திருக்கிறார்கள்'' என்றார். அப்போது பார்வதி என்ற பெண்மணியும், கணபதி என்பவனும் மன்னன் முன் வந்து வணங்கி நின்றார்கள். மன்னனும், ''நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?'' என்று கேட்டான்.

கணபதியும், ''அரசே! என் குடும்பம் ஏழையானது. எனக்கு மூன்று குழந்தைகள். நானும், என் மனைவியும் வேலை செய்து சம்பாதித்தாலும், அதனால் அரை வயிறு, கால் வயிறு என்றுதான் சாப்பிட முடிகிறது. இந்நிலையில் ஒரு வேலையும் செய்யாமல் இருக்கும் இந்தக் கிழவியை என்னால் வைத்துக் கொண்டு காப்பாற்ற முடியாது. மேலும் இவள் எப்போதும் வயிற்றுவலி என்றும், மூட்டுவலி என்றும், முதுகு வலி என்றும் புலம்புகிறாள். அவற்றிற்கு வைத்தியம் செய்ய என்னிடம் பணம் இல்லை. அதனால் இவளை முதியோர் இல்லத்தில் சேரச் சொன்னால் அதற்கு மறுக்கிறாள். இதற்கு நீங்கள் தாம் முடிவு கூற வேண்டும்'', என வேண்டினான்.

கணபதியின் தாயாரோ, ''அரசே! இவனைப் பெற்று வளர்க்க நான் எவ்வளவோ கஷ்டப்பட்டேன். இப்

– எல். சோபினி –

போது என் உடலில் வலிமை இல்லை. அதனால் என்னால் வேலை செய்ய முடியவில்லை. எனக்கு மகன், மருமகள், பேரன், பேத்திகள் இருந்தும், நான் அநாதை போல வாழ வேண்டுமா? என் மகனுக்கு நான் பாரம் என்றால், எனக்கு ஏதாவது தண்டனை கொடுங்கள்'' என்றாள்.

இதைக் கவனமாகக் கேட்ட மரகதசேனன் தன் மகன் விஜயசேனனைப் பார்த்தான். அவனோ அந்தத் தாயாரையும், மகனையும் மாறி மாறிப் பார்த்தான். அப்போது மரகத சேனன் தன் மகனிடம், ''விஜயா! இந்த விவகாரம் என்னைக் குழப்புகிறது. நீயே யோசித்து இதற்கு ஒரு தீர்ப்பைக் கூறு'' என்று கூறினான். விஜயசேனனும், ''தந்தையே! இதில் குழப்பமடைவதற்கு என்ன இருக்கிறது? கணபதி கூறியது முற்றிலும் உண்மையே. இப்போது அவன் உள்ள நிலையில் அவன் செய்யக் கூடியது இதுதான்'', என்றான்.

அதன் பின் விஜயசேனன் கணபதியிடம், ''நீ ஏதோ சிறிது படித்திருக்கிறாய் என்று நினைக்கிறேன். தாய், தந்தையரை அவர்கள் வாழ்வுகாலம் முழுவதும் ஒரு மகன் வைத்துக் கொண்டு பேணி வரவேண்டுமென்று எந்த சாஸ்திரமாவது கூறுகிறதா?'', என்று கேட்டான்.

கணபதியும், ''இல்லை. அது மட்டுமல்ல. நாம் பட்சிகளையும், மிருகங்களையும் தினமும் பார்க்கிறோம். அவை கூடத் தம் குஞ்சுகளையும், குட்டிகளையும் பெற்றதும்,



சிறிது காலத்திற்கு வளர்த்துவிட்டுப் பிறகு அவை தம்மைத் தாமே வளர்த்துக் கொள்ளட்டும் என்று அனுப்பி விடுகின்றன. தாய்ப் பிராணியோ அல்லது தந்தையோ தன் குஞ்சுகளிடமோ, குட்டிகளிடமோ தங்களை வாழ்நாள் முழுவதும் வைத்துக் கொண்டு காப்பாற்றுங்கள் என்று கேட்பதில்லை'' என்றான்.

விஜயசேனனும், ''நீ கூறுவது உண்மையே. ஆனால் நான் ஒரு கேள்வி கேட்கிறேன். பதில் கூறுகிறாயா? நீ பட்சியா, மிருகமா அல்லது மனிதனா?'' என்று கேட்டான். கணபதியும், ''இதில் சந்தேகம் என்ன? நான் மனிதன் தான்'' என்றான். விஜயசேனனும், ''நீ மனிதன் என்றால் உன் தவறை உணர்ந்து நீ உன் தாயை உன் வீட்டிற்கு அழைத்துச் செல். இருப்பதைக் கொண்டு அவளையும், எல்லோரோடும் சேர்த்துப் பாதுகாத்து வா. பிராணிகளுக்கும், மனிதர்களுக்கும் இடையே நிறைய வித்தியாசம் உள்ளது. மானிடப் பிறப்பு உயர்ந்தது. கிடைப்பது அரிது. அவன் யாருக்கும் பதிலுக்கு உபகாரம் எதிர்பாராமலேயே உதவி புரிய வேண்டும். இப்போது நீ உதவி செய்ய வேண்டியது யாரோ மூன்றாவது மனிதனுக்கு அல்ல. உன்னைப் பத்து மாதம் சுமந்து பெற்ற உன் தாயாருக்குத் தான். இதைப் புரிந்து கொள்'', என்றான்.

இதைக் கேட்டதும் கணபதியின் அகக் கண்கள் திறந்தன. அவன் தன் ஈனச் செயலுக்காக மனம் வருந்தி, தன் தாயின் கால்களில் விழுந்து ''என்னை மன்னித்துவிடு, அம்மா!'', என்று கண்ணீர் விட்டுக் கதறினான். அவனது தாயும் அவனைத் தேற்றி, ''போனது போகட்டும்'', எனக் கூறினாள்.

விஜய சேனனின் இந்தத் தீர்ப்பைக் கேட்டு மரகதசேனன் மகிழ்ந்து அவன் தனக்குப் பின் நாட்டை ஆளத் தகுதி பெற்றவன் எனத் தெரிந்து கொண்டான்.

சில நாட்களுக்குப் பின் அவன் விஜயசேனனுக்கு மகுடாபிஷேகம் செய்து வைத்தான்.



இது அம்புலிமாமாவின் அன்பளிப்பு

# வீரதீர பராக்கிரமன்

2

ஓவியம் : பாணி

மன்னர் மகேந்திரதேவரின் ஆட்சியில் நாடு சுகமாக இருந்தது. முதலமைச்சர் திடீரென இறந்து போனதால், அவரது மகன் ஆதித்தனை குருகுலத்தில் இருந்து வரவழைத்து மன்னன் அவனைத் தன் அந்தரங்க ஆலோசகனாக ஆக்கிக் கொண்டான். நாட்டில் கொள்ளைக்காரர்களின் அட்டகாசம் அதிகரிக்கவே, சேனாதிபதி நரேந்திரதேவனால் அவர்களை அடக்க முடியவில்லை. மன்னன் அந்த வேலையை ஆதித்தனிடம் ஒப்படைக்க, அவனும் அவர்களைப் பிடித்து சிறையில் அடைத்தான். அவர்களில் வீரபத்திரனும் இருப்பதை அவன் கண்டான்.

ஆதித்தன் தன் அறையில் இருந்தபடி யோசித்தான். வீரபத்திரன் கூறியது அடிக்கடி அவன் நினைவிற்கு வந்தது.

நான் என்றாவது நாட்டு மக்களுக்கு துரோகம் செய்தேனா? வீரபத்திரன் அவ்வாறு கூறக் காரணம் என்ன?

மெயககாவ லாளி உள்ளே வந்தான்.

ஐயா...! தங்களைக் காண ஓர் இளம்பெண் வந்திருக்கிறாள்.

உள்ளே அனுப்பு...!

ஓர் இளம்பெண் உள்ளே வந்ததால் ஆதித்தன் எழுந்து நின்றான்.

என் பெயர் அருணா.

அருணா?

உட்காருங்கள்!

ஆதிததன அவளுககு ஓா இருக கையைக் காட்டினான்.


நான் சில ஆண்டுகள் குருகுலத்தில் இருந்தது உனக்குத் தெரியுமே...! என் தந்தை இறந்ததும் மன்னர் என்னை இங்கு வர வழைத்தார்.
ஆம். அது எனக்குத் தெரியும். ஆனால் உன் தந்தை இறந்த இரவில் என் தந்தையும் இறந்து போனார். இது உனக்குத் தெரிந்திராது. என் தந்தையும், உன் தந்தையும் ஆருயிர் நண்பர்கள். இருவரும் சதுரங்கம் விளையாடிக் கொண்டு இருப்பார்கள்.
அப்படியா?


நான் என் தந்தையோடு வரும் போது உன் தந்தை எனக்குப் படிக்க ஏதாவது புத்தகம் கொடுப்பார். அவை பெரும் பாலும் ஆயுர்வேதத் தைப் பற்றியவை.


அந்தக் கொடிய சம்பவம் நடந்த அன்று அவர்களிருவரும் சதுரங்கம் விளையாடினர். அதன்பின் உன் தந்தை விஷத்தை முறியடிக்கும் மருந்து பற்றி என்னிடம் கேட்டார்.


நான் அவரருகே சென்றேன். அதற்குள் எல்லாம் முடிந்துவிட்டது.


இதெல்லாம் எப்படி நடந்தி ருக்கும்?


என் தந்தை துடிதுடித்தவாறே மன்னரிடம் ஓடினார். ஆனால் வழியில் பாம்பு தீண்டவே, இறந்து போனார்.


இதை அறிந்தவன் வீர பத்திரன் ஒருவனே. ஆனால் அவன் அதற் குப் பின் தென்படவே இல்லை. அது ஏன் என்று மர்மமாக உள்ளது.
வீரபத்திரனா?


உன் தந்தை நினைவை இழக்குமுன் சில வார்த்தை கள் கூறினார்.


அது எனக்குப் புரியவில்லை. ஆனாலும் அவற்றை ஒரு பனை ஓலையில் எழுதி வைத்திருக் கிறேன்.


ஆதித்தன் அவளிடமிருந்து ஓலையை வாங்கிப் படிக்கலானான்.


சூரியா! எழுந்து வா! சந்திர னைப் பயங்கர கிரகணம் பிடிக்கப் போகிறது. எஜ மானன் உதவி இல்லாது நிற்கிறார். பாம்பு படம் எடுத்துத் தீண்டு முன்பே விழித்துக் கொள் மகனே!


இன்னொரு விஷயம் சொல்ல மறந்துவிட்டேன்.
இந்த விஷயம் உன்னைத் தவிர வேறு யாருக்கும் தெரியப் படுத்தக் கூடாதென எச்சரித்தார்.


தன்னுள் எழுந்த உணர்ச்சியை அடக்கிக்கொண்டு ஆதித்தன் பேச்சை மாற்றினான்.


என் தந்தை சதுரங்க ஆட்டத்தில் கெட்டிக்காரரா?
அவரும், என் தந்தையும் ஒருவருக்கொருவர் சளைத்தவரல்ல.




அன்றிரவு இன்னும் ஏதாவது நடந்ததா?


அவர் ஒரு பெட்டியைச் சுட்டிக் காட்டினார். அதை நான் எடுத்துக் கொண்டு போனேன். அது இங்கேயே இருக்கிறது.


ஆதித்தன் பெட்டியைத் திறந்து பார்த்தான். அதிலுள்ள புத்தகங்களை வெளியே எடுத்தான்.




ஆ...! என் தந்தை தம் கையால் எழுதியவை.
ஆதித்தன் புத்தகங்களைப் படிப்பதில் மூழ்கினான்.


எம் வம்சத்தைக் காக்கும் கருடனுக்கு வணக்கங்கள். தன் மாற்றாந்தாய் கத்ருவுக்கும், அவளது புதல்வர்களான நாகர்களுக்கும் பணிபுரிய வேண்டிய நிர்ப்பந்தம் கருடனுக்கு ஏற்பட்டது. ஒரு நாள் கருடனின் முதுகின் மீதிருந்து நாகர்கள் விழுந்தார்கள். அவர்களுக்குக் கோபம் வந்தது.
(தொடரும்)

# பரீட்சை பயத்தைப் போக்குவது எப்படி?




மீராவின் வகுப்பு ஆசிரியை லதா சங்கர் தம் மாணவிகளிடம், "ஆண்டு இறுதித் தேர்வுகள் நெருங்கி வருகின்றன. நீங்களெல்லாம் ஒரு வினாடியைக் கூட வீணாக்காமல் படித்துக் கொண்டே இருக்க வேண்டும்" என எச்சரித்தார். அதைக் கேட்ட வகுப்பு அமைதியுடன் இருந்தது.

ஆனால் மீராவின் நெஞ்சம் 'படக்' 'படக்'கென்று துடித்தது. அவள் தேர்வுகளை வெறுத்தாள். தேர்வு, புத்தகங்கள், வகுப்பறை, பள்ளிக்கூடம் இவற்றையெல்லாம் விட்டு விட்டு எங்காவது ஓடிவிடலாம் என்று நினைத்தாள்.

கட்டுரைகள், பிராஜெக்ட் போன்றவற்றை விரும்பிச் செய்யும் அவளுக்குத் தேர்வைப் பற்றிய நினைவு வந்தாலே தான் படித்ததை எல்லாம் மறந்து போனது போல உணர்கிறாள். தேர்வு நாளன்று பரீட்சை அறை அவளுக்கு முற்றிலும் புதிதாகத் தோன்றி ஒரு வித பயத்தையும் அளிக்கிறது. வழக்கமாக அவள் பழகும் பள்ளித் தோழிகள் ஏனோ தன்னை விட்டு விலகிப் போவதாக உணர்கிறாள். ஆசிரியைகளும் கலகலப்பாகப் பேசாமல் தம் பணிகளில் மூழ்கி இருப்பதைக் காண்கிறாள். யாருடைய முகத்திலும் புன்சிரிப்பைக் காண முடிவதில்லை.

தேர்வு அறையில் வினாத்தாள் கொடுக்கப்பட்டதும் அதை வாங்கிக் கொண்டு படிக்க முயல்கிறாள். எதுவுமே அவளுக்கு விடை தெரியாத வினா போலத் தோன்றுகிறது. தேர்வு என்றதும் நீங்களும் மீராவைப் போல தேர்வுகள் இருக்கக் கூடாதென நினைக்கிறீர்களா?

## மன உறுதிக்கான கோட்பாடுகள்

1. நான் சரியென நினைப்பதை விடவே மாட்டேன்.
2. கடைசி வரை முயன்றால் வெற்றி எனக்கே என நம்புவேன்.
3. இடையூறுகளைத் துணிவுடன் பயப்படாமல் எதிர்கொள்வேன்.
4. என் குறிக்கோளை விட்டுவிட என்னைத் தடுத்தாலும் அல்லது அச்சுறுத்தினாலும் அதற்குப் பணிய மாட்டேன்.
5. என் உடல், மனக் கோளாறுகள் எதுவாயினும் அதை நான் சரி செய்து கொள்வேன்.
6. நான் விரும்புவதை மீண்டும், மீண்டும் முயன்று பெறுவேன்.
7. வெற்றி பெற்ற ஆண்களும் தம் இன்னல்களையும், இடையூறுகளையும் எதிர்த்துப் போராடியவர்கள் என்ற படிப்பினையைப் புரிந்து கொண்டு செயல்படுவேன்.
8. எவ்வித இடையூறு ஏற்பட்டாலும் மனம் தளர்ந்து, சோர்ந்துவிட மாட்டேன்.

## பரீட்சைக் காய்ச்சல் பிடித்து விட்டதே!

நீங்கள் எப்போது பயப்படுகிறீர்கள்? உங்களைச் சுற்றி உள்ளவர்கள் பயப்படும் போது தானே நீங்களும் பயப்படுகிறீர்கள். பரீட்சைகளை நினைத்து மாணவர்கள் பயப்படுவதும், இதே காரணத்தால் தான்.

மற்றொரு காரணம் தாம் பரீட்சைக்காக நன்கு படிக்கவில்லை என்று அவர்கள் நினைப்பது தான். அதனால் கேட்கப்படும் வினாக்களுக்குச் சரியான விடைகளை அளிக்க முடியாது என்றும் எண்ணுவது தான்.

## மகேஷும், வேலைப் பளுவும்

மகேஷ் தனக்குத் திங்கட்கிழமையன்று பரீட்சை இருப்பதை வியாழக்கிழமை யன்று தான் நினைத்துப் பார்த்தான். அதுவும் கணக்குப் பரீட்சை. சில கணக்குகளை அவன் போட்டுப் பார்த்தாலும், பல கணக்குகள் புரியவே இல்லை. அவன் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்த்த வாறே கணக்குகளைப் போட்டதால் அவை சரியா என்றுகூடப் பார்க்கவில்லை. சில சமயங்களில் அவன் தன் நண்பர்கள் போட்ட கணக்குகளைக் 'காப்பி' அடித்து, ஆசிரியரிடம் காட்டியதும் உண்டு.

திங்கட்கிழமை பரீட்சை என்றால் ஞாயிற்றுக்கிழமை இரவில் எல்லாக் கணக்குகளையும் போட்டுப் பார்த்தால் போதுமென மகேஷ் நினைத்துவிட்டான். அதன்படி ஞாயிறன்று இரவில் கணக்குகளைப் போட்டுப் பார்க்க முயன்ற போது அவனால் ஒரு கணக்கைக் கூடச் சரியாகப் போட முடியவில்லை. வெகு நேரம் கண் விழித்து முயன்று பார்த்தும் முடியாமல் போகவே அவன் அப்படியே தூங்கி விட்டான். மறுநாள் பரீட்சையில் வினாத் தாளை அவன் வாங்கிப் பார்த்தபோது அவனுக்கு தலையே சுற்றியது. அப்போதே அவன் இனிமேல் தினமும் கணக்குகளைப் போட்டுப் பார்ப்பது என்று தீர்மானித்துக் கொண்டான்.

நாளைப் படித்துக் கொள்ளலாம் என்று




தள்ளிப் போட்டுக் கொண்டே போனால் படிப்பதற்கான சுமை அதிகமாகி மனதைக் குழப்பிவிடும். அப்போது பாடங்களை 'உரு'ப்போட நினைப்பீர்கள். பரீட்சை எழுதும்போது உருப்போட்டவை எல்லாம் நினைவிற்கு வந்துவிடாது. அதனால் உதறல் கண்டு நீங்கள் சரியான விடைகளை எழுத முடியாமல் திகைப்பீர்கள். இத்தகைய குழப்பங்களிலிருந்து மீள ஒரே வழி தினமும் ஒழுங்காகப் பாடங்களைப் படிப்பது தான்.





# உங்களுக்கு உதவும் சில யோசனைகள்




## ஆண்டு முழுவதிலும்

- வகுப்பில் முழுக் கவனத்தைச் செலுத்தவும்.
- நீங்கள் எழுதும் பாடங்களையும், வீட்டு வேலைகளையும் தினமும் செய்து முடிக்கவும்.
- உங்களுக்குக் கொடுக்கப்பட்ட வீட்டு வேலைகளை ஒழுங்காய் செய்து முடிக்கவும்.

இவற்றை தினமும் செய்து வந்தால் பரீட்சைக்கு முன் படித்தவற்றை மீண்டும் படிக்கும்போது எல்லாம் நன்கு நினைவில் இருக்கும். உங்களால் பரீட்சையில் எல்லா வினாக்களுக்கும் விடை அளிக்க முடியும் என்ற நம்பிக்கை ஏற்பட்டுவிடும்.



## முடிவுத் தேர்வுக்கு முன்

- பரீட்சைக்கு ஒரு மாதத்திற்கு முன்பிருந்தே பாடங்களைத் திரும்பத் திரும்பப் படிக்கவும்.
- பாடங்களைத் திரும்பப் படிக்க ஒரு திட்டம் வகுக்க வேண்டும்.
- திட்டத்தில் எல்லாப் பாடங்களுக்கும் சம அளவில் நேரம் ஒதுக்கப்பட வேண்டும்.
- எல்லாப் பாடங்களையும் திரும்ப ஒரு முறையாவது படித்து விடுங்கள்.

## திரும்பப் படிக்கும் விதம்

- எல்லாப் பாடங்களையும் முழுமையாக நன்கு படியுங்கள்.
- நீங்கள் எல்லாவற்றையும் புரிந்து கொண்டீர்களா என உறுதி செய்து கொள்ளுங்கள்.
- முக்கிய விஷயங்களைச் சுருக்கி எழுதிக் கொள்ளுங்கள்.
- சாதாரணமாகக் கேட்கப்படும் வினாத்தாளில் மாதிரி ஒன்றை கவனித்துப் பாருங்கள்.
- குறித்த காலத்துள் தேர்வுகளை எழுதி முடிக்கப் பழகிக் கொள்ளுங்கள்.
- வினாக்களுக்கு விடைகளை உருப் போட்டு எழுதாமல் நீங்கள் சுயமாகவே எழுதுங்கள்.

பரீட்சைக்குச் சில நாட்களுக்கு முன்பிருந்தே பல வகையான கேள்விகளுக்கு பதில்கள் எழுதிச் சரி பாருங்கள். இவ்வாறு செய்தால் பரீட்சையில் கேள்விகளின் விடைகளை வெகு எளிதில் எழுதி விடுவீர்கள். ஏனெனில் நீங்கள் தாம் பலவகைப் பட்ட கேள்விகளுக்கு விடைகளை எழுதி, எழுதிப் பழகி இருக்கிறீர்களே!



## பரீட்சைக்கு முந்தைய இரவில்

- கடைசி நேரத்தில் விடைகளை 'உரு'ப் போட வேண்டாம்.
- நீங்கள் எழுதி வைத்துள்ள பாடச் சுருக்கங்களைப் படித்துக் கொள்ளுங்கள்.
- நன்கு சாப்பிட்டுவிட்டு ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்.
- சீக்கிரமே படுத்துத் தூங்குங்கள்.

இப்போது புதிதாக எதையும் கற்று அறிய முயலாதீர்கள். இதுவரை அநேக மாக எல்லாப் பாடங்களையும் படித்து முடித்திருப்பீர்கள். உருப்போட்டுக் கொண்டிராமல் நன்கு தூங்கி எழுந்தாலே பரீட்சையை நல்ல விதமாய் எழுதி விடலாம்.

## பரீட்சையில்

- பதட்டப்படாமல் இருங்கள்.
- எல்லாக் கேள்விகளையும் வழி முறைகளையும் கவனமாகப் படியுங்கள்.
- எல்லாக் கேள்விகளுக்கும் விடை யளிக்க நேரம் ஒதுக்குவதோடு திரும்பப் படித்துச் சரிபார்க்க நேரத்தையும் ஒதுக்குங்கள்.
- உங்களுக்குத் தெரிந்த எல்லாக் கேள்விகளின் விடைகளையும் எழுதி விடுங்கள்.




- இதற்குப் பின் உங்களுக் குத் தெரியாதென நினைக்கும் கேள்வி களை ஒரு முறைக்கு இரு முறை யாகப் படித்து, விடைகள் பற்றி யோசித்துப் பாருங்கள். அப்போது அவற்றின் விடைகள் தெரிய வரும்.
- ஒரு கேள்விக்காக மிக அதிக நேரம் ஒதுக்காதீர்கள்.
- உங்களது விடைகளைக் கவனமா கச் சரி பார்த்து சொற்பிழைகளைத் திருத்தி இலக்கணத்திற்கு ஏற்ப இருக்கிறதா எனவும் பார்க்கவும்.




எம் நல்வாழ்த்துக்கள்

## நினைவில் கொள்ள வேண்டியவை

- வெற்றி, வேலையை அடுத்து வருவது. வெற்றிக்கு நாம் தரும் விலை உழைப்பே. இந்த விலையை நீங்கள் கொடுத்தால் நீங்கள் எதையும் அடைந்துவிடலாம். – வின்சிலம் பார்டி.
- நீங்கள் செய்வதில் உங்கள் திறமை வெளிப்படுகிறது. செய்கைக்கான காரணம் இதனை வகுக்கிறது. இக்காரணமே நீங்கள் எவ்வளவு நன்கு செயல்படுகிறீர்கள் எனக் காட்கிறது. – லூ ஹோல்ட்ஸ்.
- நன்கு செய்ய வேண்டுமென முயன்றால் மிக நன்றாகவே செய்துவிடலாம். – பாட் ரிலே.
- சிறு சிறு முயற்சிகள் தினமும் சேர்ந்து வெற்றியைக் கொடுக்கிறது. – ராபர்ட் கோலியர்.

# செய்திச் சுடர்



## ஓ! இவ்வளவு பெரிதா...!

ஜப்பானின் முனேநோரி ஐகே காமிக்கு அவ்வளவாக ஆங்கிலம் வராது. ஆயினும் இவர் இப்போது அலகாபாதில் நடந்து முடிந்த கும்பமேளாவைக் கண்டு பிரமித்துப் போனார். ஜப்பானின் மிகப் பெரிய திருவிழாவான கியான்மடூரியின் கூட்டம் அலகாபாத் கும்பமேளாவின் கூட்டத்தில் லட்சத்தில் ஒரு பங்கு தான் இருக்கும் என இவர் கூறுகிறார். தென் ஆப்பிரிக்காவின் ஆயிரமாவது ஆண்டு விழாக் கூட்டத்தையும், ஆஸ்திரேலியாவின் ஆதிவாசி களின் திரு விழாக் கூட்டத்தையும் தான் பணிபுரிந்த தொலைக்காட்சி நிறுவனத்திற்குப் படமாக்கித் தந்த இவர் அந்த நிறுவனம் தன்னை கும்பமேளாவையும் படமாக்க அனுப்புமென எதிர்பார்த்தாராம். ஆனால் அந்நிறுவனம் இவரை அனுப்பாததால் இவர் தம் வேலையை ராஜிநாமா செய்துவிட்டு இந்தியாவிற்கு வந்தாராம். ஜப்பான் திரும்பிய இவர், தான் எடுத்த கும்பமேளாப் படங்கள் நல்ல விலைக்குப் போகுமென எதிர்பார்க்கிறார்.

*2013ல் நடக்கப் போகும் கும்பமேளாவுக்கும் வர இவர் தீர்மானித்திருக்கிறார்.*

## தந்தையின் பாசம் !

பாங்காக்கின் கே.ஒய். ஓங்க் என்பவர் தம் மகன் 200 ஆண்டுப் பழமையான லோரென்சோ ஸ்டோரியோனி என்ற இத்தாலிய வயலினை வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று கேட்டதால், அவர் சிங்கப்பூரிலிருந்த தனது வீட்டை 364,000 அமெரிக்க டாலர்களுக்கு விற்று அந்த இசைக் கருவியைத் தம் மகனுக்கு வாங்கிக் கொடுத்தாராம். இந்தத் தந்தைக்குத் தம் மகன் மீது எவ்வளவு பாசம் என்று பார்த்தீர்களா!






# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/- போட்டி முடிவு ஜூன் 2001 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,
எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

பரிசு பெற்ற வாக்கியங்கள்



கூடையை உருவாக்கும் மூங்கில்
மூங்கிலால் உருவான கூடை

வாழ்த்துக்கள்

பிப்ரவரி 2001 இதழில் வெளியிடப்பட்ட
போட்டியில் வெற்றி பெற்றவர்:

ஜே. சுரேந்தர்,
104, பங்களா புதூர் ரோடு,
காளிமேடு,
காங்கயம் – 638 701.